# தமிழும் சமஸ்கிருதமும்

(ஆராய்ச்சி நூல்)





கவிஞர் தமிழ் ஒளி

★

...ள் நூலகம்

முதற் பதிப்பு : பிப்ரவரி, 1960


விலை 1—0—0.



---

## எண்ணம்

சங்கத் தமிழகம்போல், வங்கக் கடல்கடந்தும் தமிழ் மொழி, தன் புகழ் மணத்தைப் பரப்ப—அறிஞர், கலைஞர், கவிஞர் ஆகியோர் அணி திரண்டு நிற்கும் அரிய காட்சியைக் கண்டும், அவர்தம் முயற்சியில் பங்கேற்க ஆர்வங் கொண்டும், மக்கள் நூலகம் மலர்கின்றது.

அதன் முதல் காணிக்கை, முத்தமிழ் வித்தகர், கவிஞர் தமிழ் ஒளி அவர்கள் இயற்றிய 'தமிழும் சமஸ்கிருதமும்' எனும் இச்சிறுநூல்.

தொடர்ந்து மக்கள் நூலகம் வெளியிடும் அரிய இலக்கியங்களைத் தமிழ் மக்கள் ஆதரிக்க வேண்டுகிறேன்.

வணக்கம்.

—மு. ப சிவம்
மக்கள் நூலகம்



---

வெளியிட்டோர் :

மக்கள் நூலகம்

சென்னை - 29

---

பாரதம் அச்சகம், 14, உஸ்மான் ரோடு, சென்னை-17.

# முன்னுரை

உரைநடைத் துறை, கவிதைத் துறை ஆகியவற்றில், கடந்த பன்னீராண்டுகட்கு மேலாய்த் தமிழ் மொழியின் ஆக்கங்கருதித் தொண்டு புரியும் என்னைத் தமிழுலகம் அறியும்.

நிலைபெற்ற சிலை, வீராயி, கவிஞனின் காதல், நீ எந்தக் கட்சியில்?, மே தினமே வருக, முதலிய கவிதைகளும்; கவிஞர் விழா என்ற ஓரங்க நாடகத் தொகுப்பும், சாக்கடைச் சமுதாயம் என்ற சிறுகதைத் தொகுதியும், ஸ்டாலின் என்ற வாழ்க்கைச் சரித நூலும், பாப்பாப் பாட்டு என்ற சிறுவர் பாடலும் ஏற்கனவே நான் எழுதி—வெளிவந்த நூற்களாகும்

சிந்தனை, அமுதசுரபி, முன்னணி, கலாவல்லி, மனிதன், கலைமகள், கண்ணன், நல்லறம், சரஸ்வதி, சுதேசமித்திரன், தாமரை, ஜனசக்தி, (கங்கை) முதலிய இதழ்கள் என் எழுத்தைப் பரப்பப் பெரிதும் துணை செய்தன. எனினும் கால வழுவால் என் பெயர் சிறிது சிறிதாய் மறைந்து, அடியோடு மூழ்கும் நிலை வந்துற, நான் என் உயிர் ஆற்றலை ஒருமுகப்படுத்தி நின்றேன். தமிழன்னையின் அருள் கிட்டியது.

**சிலப்பதிகாரம் காவியமா? நாடகமா?** என்ற திறனாய்வு நூலை இயற்றிச் சிலம்பு பற்றிய என் நெடுநாளைய ஆராய்ச்சிக் கருத்துக்களை வெளியிட்டேன்.

என்திறன் உணர்ந்த இளங்கோ பதிப்பகம், கலைஞன் பதிப்பகம், தமிழகம், பாரி நிலையம் முதலிய பதிப்பகங்கள், என் நூற்களை வெளியிட முன்வந்தன. அவ்வாறே மக்கள் நூலகமும் என் நூலை வெளியிட முன்வந்தது. அதன் காரணமாய்த் 'தமிழும் சமஸ்கிருதமும்' என்ற இச்சிறு நூல் மலர்கிறது. தற்பொழுது, 'தமிழ் மயில்' என்ற தலைப்பில், 'இசை நாடகம்' ஒன்றை யாத்துள்ளேன். மற்றும், 'கண்ணப்பன் கிளிகள்' எனும் சிறு காவியமும், 'ஐந்திணை இன்பம்' எனும் சுவைப் புரை நூல் ஒன்றும், என்னாற் படைக்கப் பெற்றுள்ளன. மாதவி கதையையும் காவியமாக்கியுள்ளேன். இவையும் இன்ன பிறவும் என் முயற்சிகள். முயற்சிக்கு ஆக்கந்தர முன்வந்த மக்கள் நூலகத்திற்கு என் நன்றி.

தமிழுலகு மேலும் என்படைப்புக்களுக்கு ஊக்கமளிக்கும் என்ற நம்பிக்கையோடு, இச் சிறு நூலைப் படைக்கின்றேன்.

**தமிழ் ஒளி**

9-2-60 (72/73—மவுண்ட்ரோடு)

சென்னை-6

## காணிக்கை

'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' எனும் திப்பியப் புலமை சான்ற நூலை இயற்றித் தமிழ்மொழியின் பெருமையை உலகுக் குணர்த்திய மேற்புல அறிஞர் டாக்டர் கால்டுவெல் (Dr. CALDWELL) அவர்களின் நினைவுக்கு இந் நூலைக் காணிக்கை யாக்குகிறேன்.

கவிஞர் தமிழ் ஒளி
(TAMIZH OLI)

# தமிழும் சமத்கிருதமும்

"வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்" என்று தொல்காப்பிய(ப் பாயிர)மும்,

"நெடியோன் குன்றமுந் தொடி யோள் பெளவமும்
தமிழ் வரம் பறுத்த தண்புனல் நன்னாடு"

என்று சிலம்பும் தமிழ் எல்லைகளைக் குறிப்பிடுகின்றன.

அவ்விரண்டு நூற்களும் கீழ் மேல் எல்லைகளைக் குறிப்பிடாமைக்குக் காரணம், அவ்வெல்லைகள் கடல்கள் எனப் பெறப்பட்டமையினாலே!

இனி நன்னூற் காலத்திற்கு வருவோம் :

"குணகடல், குமரி, குடகம், வேங்கடம் எனும் நான் கெல்லையின் இருந்தமிழ்க் கடல்" என்று, நன்னூல் தமிழ் எல்லைகளைக் குறிப்பிடுகின்றது. நன்னூற் குறிப்பில் மட்டுமே கீழ்மேல் எல்லைகள் இன்னவை என்று சுட்டப்பட்டன. காரணம், தொல்காப்பியக் காலத்தும், சிலப்பதிகாரக் காலத்தும் மேற்கெல்லை கடலாகவே யிருந்து வந்தது. அதாவது, தமிழ் மொழி தன்னுருவந் திரியாது, மேற்குக் கடலைத் தொட்டுள்ள நிலப்பரப்பு வரை வழங்கிவந்தது. ஆனால், நன்னூற் காலத்திலோ, மேற்கெல்லை குடகம் ஆனது!

'குடகம்' என்பது மேற்குத் தொடர்ச்சி மலை.

மேற்குத் தொடர்ச்சி மலைக்கு அப்பாலும், மேற்கடலுக்கு இப்பாலும் நீண்டு கிடந்த நிலப் பரப்பாகிய சேரநாடு, சிலப்பதிகாரக் காலத்திற்கும், நன்னூற் காலத்திற்குமிடையே துண்டுபட்டு விட்டதையே இச் செய்தி உணர்த்துகிறது.

## துண்டுபட்டது எவ்வாறு?

காலப் போக்கில், ஒரு நிலப்பரப்பின் சில கூறுகள் துண்டு படுவது நிகழக்கூடியதே எனினும், அவ்வூறுகளுக்குக் காரணம் எவை என்பதனை ஆய்ந்து தெளிதல் வேண்டும்.

இறுதி ஊழியில் செந்தமிழ் நிலமாகிய இலங்கை, தமிழ் நிலப்பரப்பினின்றும் துண்டுபட்டு விட்டது. அஃது, இயற்கை ஊறு. சேரநாடு துண்டுபட்டதற்குக் காரணம், செயற்கை ஊறு. அதாவது மக்களானோரால் நிகழ்த்தப்பட்ட ஊறு. அவ்வூறு, சமத்கிருதத்தின் வடிவிற் புகுந்து நிலைத்தது.

வேதத்தைத் தலைமையாகவும், சமத்கிருதத்தைத் தாய் மொழியாகவும் கருதி வாழ்ந்தோர், சேரநாட்டில் நன்கு காலூன்றி நின்று, சேரர்தம் பிரிவுணர்ச்சியை உறுதுணையாய்க் கொண்டு, கொடுந் தமிழிற் சமத்கிருதத்தைக் குறைவின்றிப் பெய்தனர்.

அதுகாரணமாய்ச் சேரர் தம் கொடுந் தமிழ், சமத்கிருதங் கலந்த கலப்பு மொழியாய்,-மலையாளமாய் மாறுதலுற்றது. சமத்கிருத இலக்கியப் பரப்பைப் பற்றிப் படர்ந்த மலையாளம், கலைக்குத் தமிழ்த் தொன்மையையே நம்பித் தீர வேண்டியிருந்தது.

வரையின்றிக் கலப்பு நிகழ்ந்துவிட்டதன் காரணமாய், ஒலி வேற்றுமை முதலாயினவற்றைக் குறிக்க, சமத்கிருதத் தன்மைக்கேற்ற வரிவடிவம் வேண்டப்பெற்றது. அந்தத் தேவையை நிறைவேற்றி வைத்தவர் ‘எழுத்தச்சன்’. மொழித் துறையில் தாய் மரபினின்றும் விலகிய மலையாளம், கலைத் துறையில் அம்மரபைத் தழுவியே நின்றது. காரணம், சமத்கிருதம், கலைப்பரப்பற்ற இளையமொழி என்பதேயாம்.

திணைநெறிகளோடு, மக்களின் வாழ்க்கை நெறிகள் இணையக் கலைகள் பிறக்கின்றன. ஆரியர்கள், பண்டைக் குடிகள் அல்லர். எனவே, நிலத்தியல்பால் பிறக்கும் கலைச் செழுமையை, அவர்தம் சமத்கிருத மொழி பெற்றிலது.

கலையில் நிறைவுகாண விரும்பிய மலையாளம், தாய் மரபாந் தமிழ் மரபைப் பின்பற்றியதில் வியப்பில்லை.

(இதன் விரிவை, 'சிலப்பதிகாரம் காவியமா, நாடகமா?' என்ற என்நூலுட் கண்டு கொள்க.)

சேரநாடு துண்டுபட்டுக் கேரளமாய் மாறிற்று என்பதை, மொழித் துறை, கலைத்துறை ஆகியவற்ருல் நாம் உணர்வது கடினமல்ல. இன்றும் நாம் அகராதி பார்த்துத் தெரிந்து கொள்ளக்கூடிய கடுந்தமிழ்ச் சொற்கள், கேரளத்தில் மக்கள் வழக்கில் உள்ளன. 'படிஞாயிறு' போன்ற சொற்களை உதாரணமாய்க் கூறலாம்.

நாளடைவில், எலி நெற்போரை அழித்த கதை போல், சமத் கிருதச் சொற்கள் தமிழ் உருவை மாற்றியொழித்தன. இவற்ருல் நாம் அறியும் உண்மை ஒன்று உண்டு.

சமத்கிருதம் வரம்பின்றித் தமிழிற் புகுந்தால், தமிழ் வேருேர் மொழியாய் மாறிவிடும் என்பதே அவ்வுண்மை!

அஃது, மறுக்க முடியா உண்மையே என்பதைத் தெலுங்கும் கன்னடமுங்கூட உணர்த்திக் கொண்டிருக்கின்றன.

இன்றைய மலையாள மொழியை எடுத்துக்கொள்வோமாகுல், அதன் சொற்களில் நாற்பது விழுக்காடு தமிழும், அறுபது விழுக்காடு சமத்கிருதமுமாய் இருத்தலைக் காண்போம்.

கிராமங்களிற் செல்லச் செல்லத் தமிழ் விழுக்காடு மிகுதிப்படும். பட்டணங்களிற் செல்லச் செல்லச் சமத்கிருத விழுக்காடு மிகுதிப்படும்.

இவ்வேற்றுமையும் மலையாள நாட்டின் இருவேறு முனைப்பை உணர்த்தி நின்றன. அவை, தாய் மரபைத் தழுவும் முனைப்பும், சமத்கிருதத்தைத் தாங்கும் முனைப்பும் எனப் பகுத்துணரப்படும்.

இவ்விரு வேறு மரபுணர்ச்சியின் தலைவர்களாய் விளங்கியோர், சங்கம்புழை கிருஷ்ணம்பிள்ளை என்பாரும், உள்ளூர் சுப்பிரமணிய ஐயர் என்பாரும் ஆவர்.

தாய்மரபைத் தழுவும் வேட்கை, சங்கம்புழை கிருஷ்ணம் பிள்ளையிடம் பெருக்கெடுக்கக் காண்கிறோம்.

தமிழ்ச் சொற்களை மிகுதியும் பெய்து, தம் கவிதைகளை யாத்தவர் கிருஷ்ணம்பிள்ளை. அவர்தம் கவிதைகள், 'உயர்ந்த சமத்கிருத நடை' யினின்றும் விலகி, ஏழை எளிய மக்களின் உள்ளங்களைப் பற்றிக் கொண்ட பெருமையை நாம் மறத்தற் கியலாது.

கிருஷ்ணம்பிள்ளையின் 'வாழைக்குலை' என்ற கவிதை ஒன்றே இதற்குச் சான்றும்.

"மலயப் புலயனும் மாடத்து முற்றத்து
மழை வந்ந நாளொரு வாழை நட்டு"

என்று தொடங்கும் அக்கவிதையில், தமிழ்ச் சொற்கள் துள்ளு நடை போட்டுச் செல்வதைக் காணலாம்.

அவர் தொடங்கி வைத்த அவ்விலக்கிய மரபு, அவர்தம் தலையாய சீடர் எனப்படும் P. பாஸ்கரன் என்பவரால் இன்று வளர்க்கப்பட்டு வருகிறது.

'நீலக் குயில்' என்ற மலையாளத் திரைப் படத்தைக் கண்டு, அதன் பாடல்களை ஒரு முறை கேட்டாலே போதும் 'சங்கம் புழையின் மரபு வளர்கிறது' என்று தெரிந்துகொள்ள லாம்.

"குயிலினெ தேடி குயிலினெ தேடி
குதிச்சுப் போகும்மாரா—பட்டுக்
குப்பாயக்காரா"

என்ற பாடலை ஒரு முறை கேளுங்கள், செந்தமிழ் தவழும்!

இவ்வாறு மலையாளத்திலும், தாய் மரபுணர்ச்சியை வளர்க்கும் பரம்பரை இன்றும் இருந்துவருவது எதைக்காட்டு கிறது ?

சேர நாட்டில் மேலாதிக்கம் பெற்ற சமத்கிருதம், இன்று வரை தமிழ்த் தொன்மையை அழிக்க முடியவில்லை என்ப தையே சுட்டிக் காட்டுகிறது.

அது மட்டுமா? மலையாளமொழி, அன்புடனேயே நம்மை எச்சரிக்கிறது:

**"சேரர் தமிழ்க்கு நேர்ந்த கதி**
**செந்தமிழ்க்கும் நேரவேண்டாம் !**
**சமத்கிருதத்தைத் தடை செய்யுங்கள்"**

தமிழகத்திலும் தமிழ் மொழியைக் குலைக்கும் முயற்சி நடைபெருமல் இல்லை. சமத்கிருத விரும்பிகளாலும், சமயந் தழுவிகளாலும், அம்முயற்சிகள் தொடங்கப் பெற்றன. மணிப் பிரவாளம் தலையெடுத்தது. அந்நச்சுப் பாம்பைத் தலையில் அடித்துக் கொன்றனர் மக்கள். பிற்காலச் சைன, வைணவச் சமயங்களைச் சார்ந்தோர், மணிப் பிரவாள முயற்சியைத் தொடங்கித் தோற்றனர்.

> இதில் மற்ருேர் உண்மையையும் நாம் காண வேண்டும். சைன நெறியைப் பின்பற்றிய முற்காலத்தவர், சிறந்த நாட்டுப் பற்ருளராய் விளங்கவும், பிற்காலச் சைனர் சமயப் பற்ருளராய் மட்டுமே விளங்கினர். எனவேதான், முற்காலத்துத் தோன்றிய சமண நூற்களில் சமத்கிருத ஆதிக்கத்திற்கு வழிகோலப் படவில்லை.

சைனத் தத்துவ நூற்கள் சமத்கிருதத்தில் மிகுதியும் காணப்பெற்றமையால், பிற்காலச் சைனர் தமிழ் என்றும் சமத்கிருதம் என்றும் வேற்றுமை பாராட்டிலர்.

சைனத் தீர்த்தங்கரர்கள் குறித்தும், பல்வேறு சாத்திர நோக்கங்கள் குறித்தும் சமத்கிருதத்தில் வழங்கும் கட்டுக் கதைகள் ஏராளம்.

அவற்றை, முற்காலத் தமிழ்ப் புலவர் (சைனர்) எவரும் ஏற்றுக் கொள்ளவில்லை. குறளும், சிலம்பும் தமிழ் நிலத் தன்மைக்கு மாறுபடாமற் செல்வதை, ஊன்றிக் காண்போர் உணர்வர்.

சமத்கிருத முனைப்பு மேலோங்குவதன் காரணமாகவே, இன்றும் திருவள்ளுவரைக் குந்த குந்தர் என்று செப்புவதும்,

அவர் சமத்கிருதத்தில் யாத்த நூற்களை யொத்தே, குறள் விளங்குகின்றது என்பதை ஒப்புவதும் ஆகும்.

தொல்காப்பியத்தாலும், பிற தமிழ் நூற்களாலும் திணை நெறிகளை நன்குபயின்றோர், இக்குளறுபடிகளிற் சிக்கிக் கொள்ளுதல் கூடுமோ?

சைனத்தாலும் நாம் கண்டு தெளியும் உண்மை ஒன்று உண்டு. அச்சமயப் பற்றே மிகின், அஃது சமத்கிருதப் பற்றாய் முடியும். இன்றும், சைன மக்களிற் பெரும்பாலோர்க்குச்சமத் கிருதப் பெயர்களே காணப்படுகின்றன. 'சாஸ்திரி' என்று கூசாது பட்டப் பெயர் சூட்டிக் கொள்கின்றனர். சூரிய நாரா யண சாஸ்திரி எனும் பெயரைப் 'பரிதி மாற் கலைஞன்' என மாற்றிய தமிழ்ப் பற்றையே தமிழகம் வேண்டுவது, சமயஞ் சார்ந்த சமத்கிருதப் பற்றையன்று!

காலந்தோறும், சமத்கிருதப் பற்றைக் கடிவதே தமிழ்த் தேசிய இனமரபாய் இருந்து வந்துள்ளது. அம்மரபுணர்ச் சியை நன்கு புரிந்து கொண்ட சைவ சமயம், தமிழைப் போற் றிக் கொண்டே வளரத் தலைப்பட்டது. சைவ சமயத்தில் மட் டுமே மணிப் பிரவாள முயற்சி தோற்றுவிக்கப்படவில்லை யென்பதைக் கூர்ந்து நோக்குக.

சிறந்த இலக்கண ஆசிரியராகிய பவணந்தி முனிவரும், வடமொழி வரவு கருதித் தம் நன்னூலுட்சூத்திரம்வகுத்தது வேண்டப்படுவதன்று. இதன் காரணத்தையும் ஊன்றி நோக்க, அஃது, சைன சமயஞ் சார்ந்த வடமொழிச் சொற் கள், தமிழகத்து மிகுதியும் வழங்கத் தலைப்பட்ட காலத்து, அவற்றை வரவேற்கும் முகத்தான்எழுந்த வேட்கையாதலைக் காணலாம். ஈண்டும், சமயப் பற்றின் முனைப்பால், சமத்கிருத ஆக்கங் காணப்படுகின்றது!

தமிழ் இலக்கண நூலில், வடமொழிக்கு இலக்கணங் கூறும் வம்பு, வேண்டப்படுவதன்று. இது பற்றியே தமிழ் ஆன்றோர், இன்றும் நன்னூல்பால் வெறுப்புக் கொண் டுள்ளமை விளங்கும்.

சைனப் பல்லவ மன்னரைத் தமிழகத்துச் சைனர் வர வேற்றுப் புகழ்ந்தமைக்கும் காரணம் சமயப் பற்றே! பல்லவர் பலர், சைனத்தை ஆதரித்துச் சமத்கிருதத்தை வளர்த்தனர் என்பதை நாம் அறிவோம்!

எனவே அறம் ஒன்று சிறந்ததாயினும், அதைப் பின் பற்ற நினைக்குங்கால், நிலத்தன்மைக்கு மாறுபாடற்ற நிலையைக் கைக்கொள்வதே முறையாம். பிற்காலச் சைன நலிவுக்குக் காரணம், சமத்கிருதப் பற்றுடைமையே யாகும்.

''ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்'' என்று ஞான சம்பந்தர் போர்க் கொடி உயர்த்தியபோது, சைனம் நிலை குலைய வேண்டிய நிலை தோன்றிற்று.

சைனஞ் சார்ந்த சமத்கிருத மந்திரங்கள், தமிழகம் எங்கும் ஒலித்தபோது, ஞானசம்பந்தர் தமிழ் மக்களிடையில் தேசிய உணர்ச்சியைத் தூண்டி, 'ஆரிய ஊளையை அடித்துத் துரத்துக' என்று முரசறைந்தார்.

## ஒரு விளக்கம் :

இவ்விடத்தில் ஒரு விளக்கம் தேவைப்படுகிறது. ஆரியரால் தோற்றுவிக்கப்பட்டதல்ல சைனமதம். அது, ஆரியக் கொள்கைக்கு நேர் எதிரி. வேதங்களின் பரமவைரி. திராவிட மரபு பெற்றெடுத்த செல்வம்!—ஆனல், சமத்கிருத மொழி, அவ்வாறன்று. அஃது, ஆரியரால் தோற்றுவிக்கப்பட்ட மொழி.

அம்மொழியே, பண்டைத் திராவிட இன அழிவுக்கும், பண்டைத் தமிழ் நில அழிவுக்கும் பெருங் காரணம்.

அப்பகையுணர்ச்சியால் குருதி சூடேறிய தமிழினம், சமத்கிருதம் எவ்வடிவில் நுழையினும், அதை எதிர்த்துத் தாக்குவதையே தொழிலாய்க் கொண்டது!—சைன நெறி உயர்வுற்றதாயிருந்துங்கூட, சமத்கிருதப் பற்றின் காரணமாய்த் தமிழகத்தில் நலிவுற்றது!

சைனத்தின் சமத்கிருதப்பற்றை நன்கு புரிந்துகொண்ட ஞான சம்பந்தர், ''ஆரியன் கண்டாய்'' என்று திட்டவட்டமாகக் கூறினர்.

ஆரிய மொழியை அரவணைத்ததின் காரணமாகவே, பண்டைத் திராவிடக் கூறு, தமிழகத்தின் எதிர்ப்பையேற்று வீழ்ந்தது!

சிலர்,சமத்கிருதமும் திராவிட மக்களால் தோற்றுவிக்கப் பட்டதே என்று கூறுவது ஏய்ப்பதற்கே ஆகும். மொழி நூல் வல்லுநரால் உதைத்தெறியப் பட்ட இக்கொள்கை, இன்று செத்து விட்டது. ஆனல் இக்கூற்றில் தொக்கி நிற்கும், 'மறு தலை உண்மை'யை வேருேர் இடத்தில் விளக்குவேன்.

# செத்த மொழி

“கன்னடமும் களிதெலுங்கும்
கவின்மலே யாளமுந் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே
ஒன்றுபல ஆயிடினும்,
ஆரியம் போல் உலக வழக்(கு)
அழிந் தொழிந்து சிதையாவுன்
சீரிளமை திறம் வியந்து
செயன் மறந்து வாழ்த்துதுமே”

என்று தமிழ்க்கு வாழ்த்துக் கூறினர் மனேன்மணீய ஆசிரியர்.

‘உலக வழக்கு’ என்பது, ‘பேச்சு வழக்கு’ என்பதன் இலக்கணே. மக்களிடையே பேச்சு வழக்கில் நிலேபெற்றுள்ள ஒரு மொழியே ‘உயிர்மொழி’ என்பதும், பேச்சு வழக்கற்றமொழி ‘செத்த மொழி’ என்பதும், மொழி நூலோர் கொள்கை. அதுவே விஞ்ஞானக் கொள்கையும் ஆகும். அஃது, எவ்வா றெனக் காண்போம்:

ஒரு தேசிய இனத்தின் தாய்மொழியாய் நின்று நிலவாது பண்டு வழங்கி, இன்று அருகிப் பேச்சு வழக்கற்ற எம்மொழி யும் ‘செத்த மொழி’ என்றே அழைக்கப்பெறும்.

இவ்வாறு, தொன்மொழிகள் செத்த நிலேயை அடைந்த தற்குப் பல காரணங்களேக்கூறலாம். ஆனல், ஒன்றை மட்டும் ஈண்டுக் காட்டுவேன்.

ஒரு மக்கள்தொகுதி, தேசிய இனமாய் நிலேபெருது, பிற மக்கள் தொகுதிகளுடன் சென்று கலந்து விடின், அதனற் பேசப் பட்ட தொன்மொழி, பேச்சு வழக்கை இழந்து விடும்.

சமத்கிருதத்திற்கு நேர்ந்தகதி இதுதான். பண்டு நாவலந் தீவிற்புகுந்து நின்ற ஆரியர், அந்நாவலந்தீவின் பழங்குடிகளுடன் கலக்கத் தொடங்கித் தம் மொழியை அம்மக்கள் மொழிகளுடன் கலந்து, கலப்பினங்களைக்—கலப்பு மொழிகளைத் தோற்றுவித்தனர்.

கலப்பினங்களும், கலப்பு மொழிகளும், 'தேசிய இனங்க'ளாகவும்—(Nationalities) 'தேசிய இனமொழி'களாகவும் உருப் பெற்றன. ஆரிய இனம் இவ்வாறு கலப்பு வெள்ளத்திற் கரைந்தது. எனவே, ஆரியமொழியாம் சமத்கிருதம் எந்தத் தேசிய இனத்தின் மொழியாகவும் மாறவில்லை.

ஆரியர் அரசுரிமை பெற்று வாழ்ந்த காலங்களில், அரசு மொழியாய்ச் சமத்கிருதம் விளங்கியது. ஆரியக் கவிகளுந் தோன்றி, நாவலந்தீவின் அழகை அருந்திப் பாடினர்.

பேச்சு வழக்கில் இருந்த ஒரு மொழியில் மட்டுமே இலக்கியப் பரப்பும் ஆழமும் ஏற்பட முடியும். கவிஞர்களுந் தோன்ற முடியும்.

பின்னர், ஆரியக் குழு—அரசிழந்து, பெரும் பான்மை மக்களுடன் (நிலத்திற்குரிய பழங்குடிகளுடன்) கலந்து கரைந்ததால், அவ்வாரியர் பேசி வந்த சமத்கிருதமும், பேச்சு வழக்கற்று நின்றது.

ஆரியக் கலப்பின் கூறு விஞ்சியுள்ள கலப்பினங்கள், தம்மையும் 'ஆரிய இனம்' என்றே அழைத்துக் கொள்ளினும், அவற்றின் தாய்மொழி சமத்கிருதம் ஆகாமல், வேறு மொழிகளா யிருத்தல் வெளிப்படை!

"சமத்கிருதம், என்றும் பேச்சு வழக்கில் இருந்த மொழியல்ல. அஃது, அறிஞர்க்காக இயற்றப்பட்ட பொது மொழியாய் இருந்து வந்தது" என்று கூறுவது பொருந்துவதன்று!

சமத்கிருதம், சிலரால் இயற்றப்பட்டது என்று கொண்ட கொள்கைதான், அம்மொழி, சிவபிரான் உடுக்கையிற் பிறந்தது என்று மக்களை ஏமாற்றியது. இதே போன்ற மற்றொரு

போலிக் கொள்கை, அப்பெருமானுர் அம்மொழியைப் பாணினிக்கு வகுத்து அருளினுர் என்றும் தெரிவித்தது.

'கடவுளாற் படைக்கப் படுவதல்ல மொழி; மனிதர் பேச முற்படும் முயற்சி யாலேயே, மொழிகள் பிறக்கின்றன' எனும் உண்மையைத் தமிழ் இலக்கண நூற்கள் நன்கு உணர்த்துகின்றன.

ஆரிய இனமொழியே சமத்கிருதம் என்று கூறின், அதனை நாவலந்தீவினர் வெறுத்தல் ஒருதலை. அவ் வெறுப்பினைப் போக்கவே, ''அஃது இயற்றப்பட்ட பொது மொழி'' என்ற போலிக் கொள்கை தோன்றியது.

# சமத்கிருதத் தோற்றம்

ஆரியர் பண்டு பேசிவந்த மொழி, நாடோடி மொழியே யாகும். அதனையே 'பண்டைய ஆரியம்' என்று குறிப்பர். அஃது, வரிவடிவம் பெறாது நீண்டநாள் வழங்கி வந்ததோர் மொழி.

நாவலந் தீவிற் புகுந்த பின்னர், அத் தீவக மக்களின் தொன்மொழிகள் சிறப்புற்ற நிலையில் வழங்கி வருவதனைக் கண்டனர் ஆரியர். பைசாசம், தமிழ், பிராகிருதம், பாலி, பிராமி போன்ற தொன்மொழிகளே அவை. அவை செப்பமுற்ற நிலையில் வழங்கி வந்தனவாகும். அவையே பண்டையத் திராவிட மொழிகளாம். அம்மொழிகளினின்றும் பல்வேறு சொற்களையும் எடுத்துக் கொண்ட ஆரியர், அவற்றைத்தம் பண்டைய ஆரியத்துடன் சேர்த்துச் செப்பனிட்டனர். மேற்கூறிய திராவிட மொழிகளைப் போன்றே, தம் மொழிக்கும் வரிவடிவம் தோற்றுவிக்க முனைந்தனர்; அம் முயற்சியை முட்டின்றி முடித்து வைத்தவர் பாணினி.

அதாவது, மலையாளம் என்ற ஒரு புது வரிவடிவ மொழியை, 'எழுத்தச்சன்' என்பவர் எப்படி அமைத்தாரோ அப்படியே, 'சமத்கிருதம்' என்ற புது வரிவடிவ மொழியைப் பாணினி அமைத்தார்.

எப்படி, மலையாளத்தில் சமத்கிருதச் சொற்கள் மட்டும் இன்றித் தமிழ்ச் சொற்களும் உள்ளனவோ, அவ்வாறே சமத்கிருதத்தில் ஆரியச் சொற்கள் மட்டும் இன்றித் திராவிடச் சொற்களும் காணப் பெறுகின்றன. இவ்வகையில்தான், சமத்கிருதம் 'இயற்றப்பட்ட மொழி' எனும் பொருளையுடையது. 'என்றும் பேச்சு வழக்கற்றதோர் மொழி' யெனும் பொருளில் அச்சொற்றொடர் வழங்கப் பெறவில்லை.

பேச்சு வழக்கில் மட்டுமே இருந்த ஆரிய மொழிக்குப் பாணினி வரிவடிவம் அமைத்துத் தந்தது புதுமையன்றோ? அப்புதுமையை -- ஆரியர்கள், 'தெய்வ ஆற்றல்' என்று திரித்துக் கூறினர்.

புதுக் காலத்தில், மலையாள மொழியை இயற்றியவரைத் தெய்வமரபால் விளிக்க வில்லையாயினும், 'எழுத்தச்சன்' என்று ஏற்றிப் போற்றினர். எழுத்து+அச்சன் என்பதே 'எழுத்தச்சனும்'. அதாவது, 'எழுத்தின் தந்தை' யென்று பொருள்.

புதுமைக்குக் கிடைக்கும் இத்தகு சிறப்பே, பாணினிக்குக் கிடைத்தது. அவர் வகுத்த இலக்கணமும் சமத்கிருதத்திற்கு வளன் தந்தது.

மக்களாற் பேசப்பட்டு, உருவான ஒரு மொழியே இலக்கணம் பெறும் என உணர்ந்தோர், சமத்கிருதம் ஆரிய இன மொழியே என்பதை ஒப்புக் கொள்வர்.

திராவிடச் சாரம் பருகிச் சமத்கிருதம் வளர்ந்தது என்பது கொண்டு, அது திராவிட மொழியாகாது.

ஒரு மரத்தின் சாரம் பருகி வளர்ந்த புல்லுருவி எவ்வாறு அம்மரத்திற் கினமாகாதோ, அவ்வாறே சமத் கிருதமும் திராவிடத்திற்கு இனமாதல் இல்லை.

இவ்வாற்றான் ஆரிய மொழியை நன்குணர்வோர் வேதங்களிற் காணப்படும் தமிழ்ச் சொற்களைக் கண்டு மருளார்.

திராவிட மொழிகளின் உரம் பெற்று உருவான ஆரிய சமத் கிருதம், அத் திராவிட மொழிகளை அழிக்கும் புல்லுருவித் தன்மையையும் பெற்ற ஒன்றாய் அமைந்து விட்டதில் வியப்பில்லை.

நாவலந் தீவை ஆளவும், அதன் சிறப்பியல்பை அழிக்கவுமே ஆரியம் எனும் சண்ட மாருதம் நுழைந்தது; ஆனால் 'திராவிடக் கூறு' என்பது, காலங் கடந்த பேராற்றலை உயிர் ஆற்றலாய்க் கொண்டு பிழைத்தது.

---

# சமத்கிருத எதிர்ப்பு

ஆரிய மரபு பெற்ற இந்தி மொழியிலும், சமத்கிருதச் சொற்களின் மிகையைக் காந்தி அடிகள் கடிந்தார் எனின், அச்சமத்கிருதத் தன்மை எத்தகையது என்பதைச் சிந்தியுங்கள்!

அதன் புல்லுருவித் தன்மையைக் கருதியே — அதனுல் தமிழ் நிலத்திற்கு ஏற்பட்ட அழிவைக் கருதியே — தமிழ் மக்கள் சமத்கிருத எதிர்ப்பைத் தம் கொள்கையாய்க் கொண்டுள்ளனர்.

சமத்கிருதம் பயின்ற கம்பர், காவியம் பாடிச்சிறந்தார் என்ற உண்மை, சமத்கிருதக் கலப்புக்கு உரிமை கோருவதன்று!

ஒரு மொழியைக் கற்றதால் பெற்ற அறிவின் துணை கொண்டு, சிறந்த படைப்புக்களை உருவாக்கலாம்; அது மேதைமை! பிறமொழிக் கலப்பால் நம் மொழியில் எதையும் இயற்றலாம் என்று கருதுவது பேதைமை!

தமிழ் மரபு என்பதும், தமிழ்த் தேசிய இனவுணர்ச்சி என்பதும், சமத்கிருத எதிர்ப்பைக் கொண்டவையே. இது, வரலாற்றுல் உருவாக்கப்பட்ட நாட்டுப் பண்பு. (National Character).

இது, பண்டு பாரதத்தின் பொதுப் பண்பாயிருந்து, பின்னர் தமிழகத்தின் உயிர்ப் பண்பாய் நிலவுகின்றது. மகான் புத்தரும், 'தெய்வ மொழி'யாம் சமத்கிருதத்தை எதிர்த்துப் பாலி மொழியிலேயே பேசியும், எழுதியும் வந்தார் என்பதை நோக்குக!

சமத்கிருத மொழி தோற்றுவிக்கப்பட்ட புதுமை, பண்டைத் திராவிட மொழிகளின் உயிரை உறிஞ்சிக் குடித்தது!

எனினும், அவை சமத்கிருதத்தை எதிர்த்துக் கடுமையாய்ப் போராடின!

அப்போராட்டம் நீண்ட நாட்கள் நிலைபெறக் கண்ட ஆரியர், சமத்கிருதக் கருவியையுங் கொண்டு, இனக்கலப்பிற் புகுந்தனர்; இம்முயற்சி அவர்கட்கு வெற்றியைத் தந்தது!

இனக் கலப்பால், பண்டைத்திராவிட மொழிகள் அழிந்து, புது மொழிகள் தோன்றின! ஆனல் சமத்கிருதமோ ஏட்டில் மட்டும் இருந்து, 'செத்த மொழி' யாய் நின்றது!

முற்றும் அழிந்த மொழிகள், செத்த மொழிகள் ஆகா. ஏட்டில் மட்டும் நின்று, பேச்சு வழக்கற்ற மொழிகளே "செத்த மொழி'களாம்.

## வட மொழி - பெயர்க் காரணம்

ஆரியர் வட புல மக்களை வென்று ஆண்ட காலையில், சமத்கிருதம் வீறுகொண்டு பரவவே—அதனை 'வட மொழி' என்று குறித்தனர் ஆன்றோர்.

தெற்கின் கண் தமிழ் மொழி திராவிட இன வீறு பெற்றுச் சிறந்திருந்ததால், அதனைத் 'தென் மொழி'யென்று சுட்டும் வழக்கு நிலைத்தது.

பார்க்கப் போனல்—வடக்கின் கண் தோன்றிய ஆரிய இனச் சமத்கிருதம், தெற்கின் கண் காணப்பட்ட திராவிட இனத் தமிழ் மொழிக்கு ஓர் அறைகூவலாய் அமைந்தது.

''வட புலத்து மொழிகளை வென்று தின்றேன்; உன்னையும் விடேன்''—என்று சமத்கிருதந் தமிழை நோக்கிக்கூவியது. அன்று தொடங்கித் தமிழ் இனம், சமத்கிருதத்தோடு விடாது போர் புரிந்து வருதல் வெளிப்படை! சமத்கிருத விரும்பிகளிற் பலர், தமிழை அழிக்கவே முயன்று வந்துள்ளனர். அவருட்சிலர், தமிழ்க்குத்தொண்டு புரிந்து, தின்ற உப்புக்கு உரிமையுடையோர் ஆயினர்; எனினும், சமத்கிருத விரும்பிகளின் பொதுப் பண்பு, தமிழ் ஒழிப்புக் கொள்கையே என்பதை நாம் மறந்து விடக்கூடாது!

"ஆரியம் நன்று; தமிழ்தீது" என வுரைத்த 'குயக்கொண்டான்' கதையின் உட்பொருளை ஓர்க!

நவீன காலத்தில், மேனுடுகளினின்றும் போந்த வெள்ளையர்களே தமிழ் மொழியின் உறக்கத்தைக் கலைத்தனர். சமத்கிருதப் பாசியை அகற்றித் தமிழ் மொழியின் உண்மையை உலகிற்கு உணர்த்தினர். அவர் தந் தமிழ்த் தொண்டே சாலச் சிறந்த தொண்டாம்.

டாக்டர் - கால்டுவெல் முதல், டாக்டர் கமில்சுவெலெபில் வரை, தமிழ் மொழிச் சிறப்பைக் கருதிய ஆன்றோர் ஆவர்.

---

# வட மொழியுந் திசை மொழியும்

"வட மொழி ஆக்கம்'' என்ற தலைப்பின் கீழ் நன்னூலிற் காணப்படும் சூத்திரம், பாணினி வியாகரணத்தோடு ஒத்த தன்று; அஃது, வட மொழி நூலாருள் ஒரு சாரார் கொள்கையைத் தழுவி நின்றது.

இவ்வாறு, வட மொழிக் குளறுபடியைத் தமிழ் இலக்கணத்துட் புகுத்தி, சமத்கிருத எழுத்துக்களை நாம் கற்குமாறு செய்யும் பவணந்தியார் நோக்கம், வட மொழி ஆக்கங் கருதியதேயாம்.

ஆரியத்திற்கும், தமிழிற்கும் பொதுவாகவுள்ள எழுத்தால் ஆகித் தமிழில் வந்து வழங்கும் வட மொழி, 'தற்சமம்' என்றும், ஆரியம், தமிழ் ஆகியவற்றின், சிறப்பும் பொதுவுமாகிய ஈரெழுத்தாலுந் தமிழில் வழங்கும் வட மொழி 'தற்பவம்' என்றும் உரைகண்டு, பழந் தமிழ்ச் சொற்களையே ஆரியச் சொற்கள் என்று காட்டி நம் கண்களில் மண்ணைத் தூவும் முயற்சிக்குப் பவணந்தி வழி கோலினர்!

முன்னர் நம்மிடம் ஒரு பொருளைக் கடன் பெற்றான் ஒருவன், அப்பொருளைத் தன் பொருள் என்று காட்டும் மாய் மாலமே தற்சமம், தற்பவம் எனும் கூத்து!

பவணந்தியார் சைனராதலாலும், சைனம், சமத்கிருதத் துணைகொண்டு வாழ முயன்றதாலும், வடமொழி ஆக்கம் வேண்டப்பட்டது.

"நமையெலாம் வட மொழி
தூக்கிடும் தாம்பு;
நம் உரிமைதனைக் கடித்ததப்பாம்பு''

என்றுபாடுகிறார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். அவர் தம் கருத்தாழம் கூர்ந்து நோக்கத் தகுந்தது.

தமிழ் நிலத்தின் உரிமையைச் சிறிது சிறிதாய் விழுங்கிய ஆரியப் பாம்பே சமத்கிருதம்; சமய நோக்கங் காரணமாய் இவ்வுண்மையை நாம் மூடி மறைத்தற் கியலாது.

எனவேதான் அதனை, 'வடமொழி' என்றழைத்தனர் ஆன்றோர். 'திசைமொழிகள்' என்று மட்டும் கூறிவிடுப்பின், வடமொழியுந் திசைமொழியுட் புகும் என்று கருதியே-'திசை மொழி' என்ற பிறகும், 'வடமொழி'என்ற சொல் கொண்டு ஆரிய மொழி பிரித் தோதப்பட்டது.

தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி
பன்றி, அருவா, அதன் வடக்கு—நன்றாய
சீதம், மலாடு, புனல் நாடென விவை
ஏதமில் பன்னிரு நாட் டெண்''

என்ற பாடல், திசை மொழிகள் பனிரெண்டாதலைக் குறித்தது.

செந்தமிழ் வழங்கும் நிலப் பகுதியை மையமாய்க் கொண்டு சூழ்ந்த குறுநாடுகள் பனிரெண்டு. அவற்றில் வழங்கிய தமிழ்ச் சொற்கள், செந்தமிழ்ச் சொற்களினின்றும் வேறுபாடுடையவை.

சேரநாட்டுத் தமிழ்க்கும், சோழ நாட்டுத் தமிழ்க்குமுள்ள வேற்றுமைபோல், ஒவ்வொரு குறுநாட்டுச் சொற்களும், தம்மில் வேற்றுமை கொண்டு வழங்கின. எனினும், அவையாவுந் தமிழ்க்குரிய சொற்களேயாம்! எனவேதான் 'ஏதமில் பன்னிருநாடு' என்று கூறப்பட்டது. ஏதம் என்றால் குற்றம். ஏதமில் என்றால் 'குற்ற மற்ற' என்பது

பொருள். குற்றமற்ற அச்சொற்கள், தமிழ் மொழியின் உரிமைச் சொற்களாம்!

ஆனால், வடமொழி, தமிழில் வந்து வழங்குதல் குற்றம். தமிழ் இலக்கணத்துள், வடமொழி ஆக்கம் புரிதல் குற்றம்!

செந்தமிழ் நிலமொழிந்த ஏனைத் தமிழகத்துத் திசை நிலங்களைக் குறுமன்னர்கள் ஆளுகை புரிந்தனர். குறுமன்னர் களை அண்டி வளர்ந்த சமத்கிருத விரும்பிகள், குறுநிலத் தமிழ்ச் சொற்களில் சமத்கிருதங் கலந்து, அந்நிலங்களைக் கெடுத்துத் தமிழ் உரிமையைக் கொன்றனர்.

இவ்வாறு, இன்றையத் தமிழகம் ஒழிந்த ஏனைய தமிழ் நிலங்களைச் சமத்கிருதம் விழுங்கியதாலேயே, "நம் உரிமை தனைக் கடித்ததப் பாம்பு" என்றார் புரட்சிக் கவிஞர்.

# வடுகு

பழந்தமிழிற் சமத்கிருதம் புகுந்ததால் எழுந்தவையே 'வடுகர் நாட்டு' மொழியாம் தெலுங்கும், எருமை நாட்டு மொழியாம் கன்னடமும், மலைநாட்டு மொழியாம் மலையாளமும்.

கன்னடப் பெண்டிரை விளிக்கும் கலிங்கத்துப் பரணி கீழ்க்கண்டவாறு பாடுகின்றது:

"மழலைத் திருமொழியிற் சில
வடுகும் சில தமிழும்
குழறித் தரு கருநாடியர்
குறுகிக் கடை திறமின்!"

வடுகச் சொற்களும், தமிழ்ச் சொற்களும் கன்னடத்திற் பயில்கின்றன என்ற உண்மை, கன்னடம் பழந்தமிழே என்பதை உணர்த்துவதாம்.

இனி, வடுகச் சொல் என்பது என்ன? அது, சமத்கிருதங் கலந்து திரிந்த தமிழ் அன்றோ?

பழந் தமிழகம் விந்தியமலைவரை பரந்திருந்தது என்பதை மறந்தவர் தாமே, 'வடுகு மொழி'யை வடமொழி என்பார்?

கலிங்கத்துப் பரணி, தெலுங்கு மொழியை, 'வடுகு' என்றே அழைப்பது காண்க. ஏனை இலக்கியங்கள் எவையும், வடுகை 'வடமொழி' என்று சுட்டாமை காண்க.

விந்தியமலைக்கு அப்பால் உள்ளது 'வடபுலம்' என்பதும், இப்பால் உள்ளது 'தென்புலம்' என்பதும் வழக்கன்றோ?

'வடவாரியர்' என்பது கொண்டு, 'தென்னாரியர்' என்போரும் இருந்தனர் என்று கொள்வது பொருந்தாது. 'செஞ்

ஞாயிறு' என்பது கொண்டு, 'கருஞாயிறு' என்பதொன்றும் உள்ளது என்று கொள்வது குற்றம் அன்றோ?

'ஆரியர்' என்பார் உயர்ந்தோர் என்ற கண்ணோட்டம் சமூகத்திற் புகுத்தப்பட்ட போது, 'ஆரியம்' என்ற சொல் உயர்வைக் குறித்தது. அது கொண்டு, ஆரியர் தமிழ ரெனக் கொள்வது, சொற்களின் சரிதம் அறியார் கொள் கையாம்!

ஆரியர் எனினும், வட..வாரியர் எனினும் ஒன்றே. தமிழ் எனினும், தென்றமிழ் எனினும் ஒன்றே.

வடமொழி எனினும், சமத்கிருதம் எனினும் ஒன்றே.

தென் மொழி எனினும், தமிழ் மொழி எனினும் ஒன்றே.

ஆரியர் மொழி, ஆரியம். அவர்கள் வடக்கே வாழ்ந்தனர். தமிழர் மொழி, தமிழ். அவர்கள் தெற்கே வாழ்ந்தனர்.

---

## ஒருமித்த உளப் பண்பு: 'SCYCOLOGICAL MAKE-UP'

ஒரு தேசிய இனத்தின் எப்பகுதியேனும்—சிறிதோ, பெரிதோ -'ஒருமித்த உளப்பண்பு' கொண்டிராவிடில், நாள டைவிற் சிதறுண்டு விடும்.

தென்னகமாம் பெரு நிலப்பரப்பில் வாழ்ந்த தமிழ்இனம் 'ஒருமித்த உளப்பண்பை' இழந்த நிலையில் சிதறுண்டு, இன்று வேங்கடத்திற்கு இப்பால் குறுகிக் குமைகின்றது. தொடர்ச்சி யான நிலப்பரப்பைப் பெற்றிருந்தும் கூடக் கேரளம் வேறு தேசிய இனமாய் அமைந்து விட்டதனை நோக்குங்கள்.

கடல் பிரித்த போதும், கருத்துப் பிரியாமல் தமிழ் உளப் பண்புடன் வாழ்ந்து, இன்றும் தமிழராய் விளங்கும் ஈழ மக் களை நோக்குங்கள்.

சமத்கிருதம் போன்ற ஒரு கொடிய தீ, அம்மக்களைச் சுட் டெரிக்க வொட்டாமல், திரை கடல் இடையிற் புகுந்து தடுத் தது, அவர்தம் பேறன்றோ?

இன்றேல், திசை நாடுகளை யெல்லாம் விழுங்கிய சமத்கிருதம், அவர்களையும் விழுங்கி யிருக்கும் அன்றோ?

ஒரு தேசிய இனத்தின்'ஒருமித்த உளப்பண்பை' உருவாக்கும் கருவியாய் இருப்பது எது? என்பதைக் கூர்ந்து நோக்க அஃது, மொழியாய் இருத்தலைக் காண்போம்.

அம்மொழி, திரிபுபெறின் அத்தேசிய இனத்தின்ஒருமித்த உளப் பண்பு கெடுதல் ஒருதலை.

ஏதமில் பன்னிரு நாடுகளைக் கடல் விழுங்கி விடவில்லை. மைசூர் முதல் சித்தூர் வரையுள்ள நிலப்பரப்பையும், அப் பன்னிரு நாடுகள் உள்ளடக்கியன என்பதைக் காண்பார், சமத்கிருதம் புரிந்த தீங்கையுங் காண்பார்.

எனவே, சமத்கிருதச் சொற்களின் மிகையைக் கெடுத்துத் தமிழ் மொழியைக் காப்பது, தமிழர்களின் கடமையாம்!

# இந்திரன் யார்?

அகலிகை ஓர் இணையற்ற பாத்திரம். ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து உயர்ந்தும், மாசு கற்பிக்கப்பட்ட பாத்திரங்களுள் அகலிகையே உலகின் அநுதாபத்தைத் தன் பக்கம் ஈர்த்தவள். அவளை, வான்மீகி இந்திரனைப் புணர்ந்து, கோதமனாற் சாபம் பெற்ற கோதையாக்கிக் காட்டினார். கம்பரோ இந்திரனை மாய வேடம் பூண்டவனாக்கி, அகலிகையின் கற்புக்கு ஆதரவு காட்டினார். எனின், இந்திரனின் நிலை என்ன?

வான்மீகத்திலாவது, இந்திரனை ஆண்டகையாய்க் காண முடிகிறது. ஆனால், கம்பனிலோ அவன் கடையனாக்கப்படுகிறான். கம்பன் ஒருபுறம் இருக்க, அகலிகை கதையை எழுதிய திரு. வெ. ப. சு. அவர்கள், கம்பனுடைய அதே தர்மக்கண் அளித்த உக்கிரப் பார்வையால், இந்திரனைக் கடைகெட்ட போக்கிரியாய்க், காம வெறியனாய்ச் சித்திரிக்கிறார்.

கம்பரில், கைக்கிளையிலிருந்த இந்திரன், வெ. ப. சு. அவர்களில் பெருந்திணைக்கு வந்து விடுகிறான்.

திரு. ச. து. சு. யோகியும், வெ. ப. சு. அவர்களின் அதே தர்ம ஆவேசத்துடன் கிளம்பி, இந்திரனைச் சாடுகிறார். 'காமச் சிறுபுழு நீ' என்று இந்திரனை அகலிகை சுடுகிறாள்—யோகியின் ஆவேசத்திற்கு அச்சுடு சொல்லே எடுத்துக் காட்டு. ஆனால் யோகியின் கோதமன்-வான்மீகி, கம்பர், வெ. ப. சு. ஆகியோர்களின் கோதமர்களினின்றும் வேறுபட்டவன். பலமற்றவன்.

எனினும் மேற்காட்டிய இருசாராரும் — ஒப்பும் கருத்து என்னவெனில், 'இராமன் அறத்தின் நாயகன்' - 'இந்திரன் அறங்கொன்ற அற்பன்' என்பதே!- இப்பொதுக் கருத்தே, அவர்களை இணைக்கும் சங்கிலி.

ஆனல், இவ்விரு சாராருடனும் இணையாத ஓர் அபூர்வக் கருத்தையும் நாம் தமிழ் இலக்கியத்திற் காண்கிறோம். அக் கருத்திற்குரியவர் மோகன ஆற்றலைப் பெற்றுள்ள புதுமைப் பித்தன் என்பவர் ஆவார்.

யோகியின் கோதமனைப் போன்றே புதுமைப்பித்தன் கோதமனும் பலமற்றவன் தான். ஆனல், புதுமைப் பித்தன் இன்னும் ஒருபடி மேலே போய், பக்குவமடையாத ஒருவனின் சபலங்களைக் காட்டுவது போன்று, அவ்வளவு தெளிவாகக் கோதமனைப் படம் பிடிக்கிறார். அவர் மட்டுமே, தொல் லாசிரியன்மார், அறத்தின் வேலியென்று காட்டிய இராமனைக் - கேவலம், அவன் பாததூளியால் உயிர்பெற்ற அகலிகையைக் கொண்டே தோற்கடித்தரர்.

தர்க்க சாத்திரம் எதைக் கற்றுக் கொடுக்குமோ, எதைக் கற்றுக் கொடுத்தால் தர்க்க சாத்திரம் சரியென்று ஏற்றுக் கொள்ளப்படுமோ, அதே ஆயுதத்தைக் கொண்டு, இராமதத் துவத்தைத் தகர்த்தெறிந்தார் புதுமைப் பித்தன்.

அவர் மட்டுமே—ஒரு சரித்திரக் கதாநாயகனைப் போன்று துணிவுடன், பிறர் நெருங்கவே அஞ்சும் அத்தாணி மண்ட பத்தை அடைந்து, அங்கே குருடாய்க் கிடந்த உண்மையின் கண்களைத் திறக்க முயன்றார்.

எனினும், உண்மையின் இருகண்களும் இன்னும் திறக்கப் படவில்லையென்றே கூறலாம். அஃது, எவ்வாறெனக் காண் போம்:

இந்திரன் என்பவன் வெறும் கற்பனைக் கடவுள் அல்லன். அவன் தமிழகத்துத் தீம்புனல் உலகைச் சார்ந்தவன். காவிரிப் பூம் பட்டினத்தில் விழாக் கொண்டவன். அப்பட்டினத்தை என்றென்றும் காக்க நாளங்காடிப் பூதத்தைச் சோழர்க்குக் கொடுத்தவன். அவன் ஐந்தவித்து உயர்ந்து, அதனல் அம ரர்க்குத் தலைவன் ஆனவன். தவத்தினற் சாப ஆற்றலைப் பெற்றவன்.

அவன் இட்ட சாபமே, ஊர்வசியை மண்ணுலகிற்குக் கொண்டு வந்தது. சயந்தனைத் தலைக்கோல் ஆக்கியது.

உயர்பதவி யென்றால், அஃது, இந்திரபதவி யென்றே பொருள். மூன்று உலகிலும், இந்திர பதவிக்கு மேற்பட்டு எதுவும் இல்லை.

இந்திரனின் ஆயிரங் கண்கள் என்பன, தவ ஆற்றலைக் குறிக்கும் 'உருவகக்' கண்கள்! அவை மூன்றுலகங்களையும் ஒருங்கே அறியும் ஆற்றல் பெற்றவை. இதற்குப் பொருள், அவன் ஞானமயமானவன் என்பதேயாகும்.

**"ஐந்தவித்தான் ஆற்றல்**
**அகல் விசும்புளார் கோமான்**
**இந்திரனே சாலும் கரி"**

என்ற குறட்பாவுக்குப் பொருள், "ஐந்தவித்த ஒருவன், எத்தகைய ஆற்றலைப் பெறுவான் என்றால், (ஐந்தவித்துயர்ந்து) அமரர்க்கு அரசனான இந்திரனே சாட்சி" என்பதாம்.

மேற்காட்டிய குறட்பாவின் பொருளைப் பரிமேலழகர் மாற்றினார். பிற்காலப் புராணக் கதையைத் துணைகொண்டு, 'ஐந்த வித்துயர்ந்தோன் கோதமன்' என்று வலிந்து பொருள் செய்தார்!

கோதமன் பாத்திரம் எத்தகையது?

அவன் சூழ்ச்சி செய்வதில் சமர்த்தன். அவன் காதல் கைக்கிளையைச் சார்ந்தது. பசுவை வலம்வந்து அகலிகையைப் பறித்துக் கொண்ட ஒன்றே, மேற்கூரிய இருதன்மைகளையும் நிரூபிக்கப் போதிய சான்றாம்.

கோதமன் சாப ஆற்றற் பெற்றவன் என்பதற்கும் போதிய சான்றுகள் இல்லை.

ஒரு முனிவனுக்கு இருக்க வேண்டிய புலனடக்கம் கோதமனுக்கு இல்லை. அவன் இல்லறத்தைக் கூடத் தாண்டவில்லை—அதற்குள்—அவன் சாப ஆற்றலைப் பெற்றுவிட்டான் என்பது தவம் என்கிற தத்துவத்திற்கு ஏற்பட்ட களங்கம்.

தவத்தால் உயர்ந்த தமிழகத்தின் இந்திரன், வேதங்களுக்கும் முற்பட்டவன். இமயத்தின் வடபால் உள்ளோராலும் வணங்கப்பெற்றவன்.

புகாரின் இந்திர விழாவினைக்காண, ''வெள்ளிமால் வரை வியன் பெருஞ் சேடி''யினின்றும் தன் மனைவியுடன் போந்த, விஞ்சை வீரனைப் பற்றிச் சிலம்பு பேசுகிறது!

தமிழகத்தின் இந்திரன், 'பொருள் முதல்வாதி' (Materialist) என்று கூறுவதற்கும் சான்றுகள் உள்ளன. அவன் பொருண் முதன்மைத் தத்துவ நூலுக்குப் பெயர், 'ஐந்திரம்' என்பதாகும்.

ஐந்திரம் உணர்ந்த சான்றோருள், தொல்காப்பியரே, சிறந்தவர் ஆவார். எனவேதான், அவர், 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியர்' என்று விதந்தோதப் பெற்றார்.

கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் ஆகிய மூவரும், மதுரை செல்லுங்கால், அவர்களைப் புண்ணியத் துறைகளில் மூழ்கவும், தெய்வப் பிலத்திற்புகவும் தூண்டுகிறான் மாங்காட்டு மறையோன்.

''தெய்வப் பிலத்தினுட் சென்றால், அங்கே புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி எனும் மூன்று பொய்கைகள் உள; அவற்றுள்,

1, புண்ணியசர வணம்
பொருந்துவி ராயின்
விண்ணவர் கோமான்
விழுநூல் எய்துவிர்!

2. பவகா ரணிபடிந்
தாடுவி ராயின்
பவகாரணத்திற்
பழம் பிறப் பெய்துவிர்!

3. இட்ட சித்தி
எய்துவி ராயின்
இட்ட சித்தி
எய்துவிர் நீரே!"

என்று விளக்குகிருன் மறையோன்,

அவற்றை யெல்லாம் பொறுமையுடன் கேட்டுக்கொண் டிருந்த கவுந்தியடிகள், "நான் மறையாள! நீ செப்பிய தெய்வப் பிலத்திற்புகும் தன்மை எம்மிடம் இல்லை! ஏனெனில், எங்கள் கப்பத்திந்திரன் காட்டிய நூலில், பிறப்பின் இயற்கைத் தன்மைகள் விளக்கப்பட்டுள்ளன:

"வாய்மையின் வழா அது
மன்னுயிர் ஓம்புநர்க்கு
யாவதும் உண்டோ
எய்தா அரும் பொருள்?"

என்பதே, அந்நூற் கொள்கை என்று மறுப்புக் கூறுகிருர்.

கவுந்தியடிகளின் இம்மறுப்பு, நமக்கு எதை உணர்த்துகிறது? மாங்காட்டு மறையோன் சுட்டும் விண்ணவர் கோமான், 'கப்பத்திந்திரன் அல்லன்' என்பதையே உணர்த்துகிறது.

"விண்ணவர் கோமான் விழுநூல்" என்ருல் வேத நூல் என்று பொருள். "விழுநூல் எய்துவீர்" என்ருல், "வேதப் பொருளாம் மோட்சத்தை அடைவீர்" என்று பொருள். ஈண்டு, விழுநூல், ஆகு பெயர்.

"கப்பத்திந்திரன் காட்டிய நூல்" என்பது—ஐந்திரம் ஆகும். "கப்பத்திந்திரன் காட்டிய நூலின் மெய்ப்பாட்டியற்கை விளக்கங்காணுய்" என்று, கவுந்தியடிகளின் கூற்றில் வரும் மெய்ப்பாட்டியற்கை எனும் சொல்லுக்குப் 'பரமாகமம்' என்று பொருள் கொண்டார் அடியார்க்கு நல்லார். அதற்காக—"மெய்ப்பாட்டியற்கையின்" என்று, 'இன்னிருபு' விரித்து, "அருகன் அருளிய பரமாகமத்திற்காண் கிலேயோ?" என்று வலிந்து பொருள் செய்தார்.

"மெய்ப்பாட்டியற்கை" என்பது, 'பிறப்பின் இயற்கை' என்று ஆகுமே அல்லாது, 'அருகன் அருளிய பரமாகமம்' என்று ஆதல் இல்லை.

இப்பொருட் குழப்பத்தினை உணரார், மாங்காட்டு மறையோன் சுட்டும் 'விண்ணவர் கோமானும்', மாதவத்தாட்டி சுட்டும், 'கப்பத்திந்திரனும்' ஒன்றெனக் கொண்டு மயங்கினர்.

கப்பத்திந்திரன் வைதிகக் கொள்கையின் எதிரி. அவனுடைய ஐந்திரம் தெய்வத் தன்மையை மறுக்கும் நூல். முழுமுதற் கடவுளை வெறுக்கும் நூல்.

"வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்று தொல்காப்பியம் சுட்டும்—வேந்தனே, "கப்பத்திந்திரன்' என்பதை இதனாற் புரிந்து கொள்ளலாம்.

அறிவு, ஒழுக்கம், தவம் தொண்டு ஆகியவற்றிற்கு மதிப்பளிப்பதே 'கப்பத்திந்திரன்' கொள்கை யென்பதும், அந்நெறியைப் பின்பற்றிய தொல்காப்பியர், 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியர்' என்று அழைக்கப் பட்டார் என்பதும் தெளிவாம்.

தொல்காப்பியம், பொருண்முதன்மைக்கருத்தை ஆதாரமாய்க் கொண்டுள்ளதை நம்மால் உணர முடியும்.

"நிலந், தீ, நீர், வளி, விசும்போடைந்துங்
கலந்த மயக்கம் உலகம்"

என்று கூறும்தொல்காப்பியம், "ஐம்பூதங்களின் சேர்க்கையாலேயே உலகம்தோன்றா நின்றது" என்ற பொருண் முதன்மைக் கருத்தைக் (materialism) கொண்டுள்ளது; முழுமுதற் கடவுளால் உலகம் படைக்கப்பட்டது என்பது, வேதக் கொள்கை—அல்லது, சமய வாதமாம்! (Spiritualism)

தொல்காப்பியமும் குறளும் குறிப்பிடும் இந்திரன் தீம்புனல் உலகைச் சார்ந்த கப்பத்திந்திரன் என்பதும், அவனைப் பரிமேலழகர், ஆரியர் கற்பித்த வேதகால இந்திரனோடு சேர்த்துக் குழப்பினர் என்பதும், இதன் மூலம் தெளிவுறும் உண்மைகளாம்!

***

# தமிழ் மொழியின் ஆற்றல்

''கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெளிந் தாய்ந்தவிப் பசுந் தமிழ்...''

''இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட காலமாக, மிகப் பெரிய இனத்தவரும், ஆற்றலும் நன்கு மதிக்கற்பாடும் உடையவரும், வழிபாட்டிற்கு உரியவருமான, ஆரிய மக்களின் சமஸ்கிருத மொழியை எதிர்த்து நின்று, தம் ஆட்சியை நிலை நாட்டி வந்துள்ள திராவிட மொழிகள், தம் இடத்தைப் பற்ற வரும் வேறு எம்மொழி முயற்சியையும் இனி வரும் காலங்களிலும் எதிர்த்து அழித்துவிடும்...''

[டாக்டர் கால்டுவெல் கண்ட திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், தமிழ்-பக்-3. வெளியீடு:வள்ளுவர் பண்ணை]

*
* *

# தமிழ் தரும் தமிழ்!

டாக்டர்-கால்டுவெல் அவர்களின் ஒப்பிலக்கணம் வெளியிடப்பெற்று நூறுண்டுகள் கழிந்தும், 'தமிழ்' எனும் சொல் பற்றிய மொழிநூற் கொள்கை, இன்னும் விளக்கம் பெறவில்லையென்றே நான் கருதுகின்றேன்.

*ஐயர் அவர்களின் கொள்கைப்படி, தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு, குடகு; ஆகிய திருந்திய மொழிகளையும்—துதம், கோதம், கோண்டு, கூ, ஒரியன், இராஜ்மகால் ஆகிய திருந்தா மொழிகளையும், நடுநின்று சுட்டும் ஒரு குறியீட்டுச் சொல்லே 'திராவிடம்' என்பது; அது 'த்ரவிட,' அல்லது, 'த்ரமிட' என்ற சம்த்கிருத மூலம் உடையது.

'தமிழ்' என்ற சொல்லைப் பிறப்பிக்க ஐயர் மேற்கொள்ளும் முறையைக் கீழே காண்க:

" 'த்ரவிட' என்பதன் மிகப்பழைய வடிவம், அல்லது மிகப் பயில வழங்கியதாகக் கருதப்படும் வடிவம், 'த்ரமிட' என்பதாம். இவ்வடிவமே, 'த்ரவிட,' 'தமிழ்' என்ற இரண்டினுக்கும் உள்ள ஒருமைப் பாட்டினை நிலைநாட்டும் முதற்படியாம்......

வராக மிகிரரின் நூலாகிய பிரஹத்சம்ஹிதாவில் சில சுவடிகள் 'த்ரவிட' என்பதற்குப் பதிலாக 'த்ரமிட' என்பதை வழங்குகின்றன. 'இந்தியாவில் புத்தமதம் பரவிய வரலாறு' என்ற பெயருடைய தாரநாதரின் நூலில், 'ட'கரம் 'ள'கரமாகத் திரியும் திரிபால், 'த்ரவிடர்' 'த்ரமிளர்' என அழைக்கப் பட்டுள்ளனர்......

சிங்கள வரலாற்று நூலாகிய மகாவம்சம் என்ற பாலி மொழி நூலில் வழங்கும் வடிவம், 'தமிளோ' என்பதாகும்...

---

* ஐயர் என்பது, கால்டுவெல் அவர்களையே குறிக்கும்.

ஈண்டு இடம் பெற்ற ஒவ்வொரு மாற்றமும், திராவிட ஒலி முறை விதிகளை அடிப்படையாகக் கொண்டனவே.

மொழி முதல் 'த்ர்', பிராகிருத மொழியில் 'த'எனத் தவறுது மெல்லொலிப்படுத்தப் பெறும். 'த்ரோஹ', 'தோஹோ' என ஆகும். இதே முறைப்படி, மொழி முதல் 'ஸ்ர்', 'ச' என்றாகும்; புத்த பிக்ஷு எனப் பொருள்படும் 'ஸ்ரமண' தமிழில் 'சமணன்' என ஆதல் அறிக. (பாலியில் சம்மன.) 'வ'கரம், 'ம'கர மாகவோ, 'ம,கரம், 'வ'கரமாகவோ திரியும் திரிபு, சமஸ்கிருதத்திலும் இடம் பெறுவது, காக்கை எனும் பொருளில் 'த்வாங்ஷ' என வருவதற்குப் பதிலாக, 'த்மாங்ஷ' என வரும் சொல்லில் காணப்படும். இம்மாற்றங்களுள், 'ட'கரத்தை 'ழ'கரமாக மாற்றும் மாற்றம் ஒன்றே கருத்தில் இருத்தக்கூடிய மாற்றமாம். அதுவும் வழக்கத்தை ஒட்டியதே; ஒரு முகத்தலளவையைக் குறிக்கும் 'நாடி' என்ற சமஸ்கிருதச் சொல்லை, 'நாழி'... என்ற தமிழ்ச் சொல்லோடு ஒப்பிடுக"...

ஆனால், முதன் முதலில் வந்த டென்மார்க் நாட்டுப் பாதிரிமார்கள், இம் மொழிக்கு இட்ட பெயராகிய 'தமுலிக' மொழி என்பதில், அவ்வெழுத்தின் தொன்மையொலிபற்றிய அடிச்சுவடு இடம் பெற்றுள்ளது......

ஒவ்வொரு சொல்லுக்கும் சமஸ்கிருத மூலத்தைக் காண்பதையே பொதுவாக விரும்பும் உள்நாட்டுத் தமிழ்ப் பேராசிரியர்கள், தமிழ் என்ற சொல்லில் மட்டும், 'த்ரவிட' அல்லது 'த்ரமிட, என்பதன் தற்பவ வடிவினை, அதாது ஒலி வேறுபட்டு வழங்கும் வடசொல் வடிவினைக் காணத் தவறுவதும், தங்கள் அண்டை மொழியினராகிய தெலுங்கரைப் போல், தம் மொழியின் பெயருக்கு இனிமைப் பொருள் கற்பிப்பதும் குறிப்பிடத் தக்கனவாம்...

அவர்கள் அம்மொழி குறித்து மேற்கொள்ளும் மதிப்பீடு சாலப் பொருந்தும் என்பதை நானும் ஏற்றுக் கொள்ளுகிறேன். ஆனால், அச்சொல் குறித்து அவர் கூறும் பிறப்பியல் முறையினை ஏற்றுக் கொள்வது இயலாது..."

*[பக்-11, 12, 13, 14; கால்டுவெல் ஒப்பிலக்கணம்-தமிழ்...]*

இவ்வாறு, கால்டுவெல் ஐயர், தமிழ் என்ற சொல்லின் பிறப்பியல் முறையைச் சுட்டுகின்றார்.

இது குறித்துத் தமிழ்ப் பேராசிரியர்களின் பரவலான கருத்தை நான் அறிந்திலேன். ஆனால், ஐயரவர்கள் காலத்துத் தமிழ்ப் புலவர்கள் இக்கருத்தை ஏற்றுக்கொண்டிலர் என்பது தெளிவு.

'திராவிடம்' என்ற சொல்லின் மூலம் எவ்வாறாயினும், அது மிகப் பயில வழங்குவதன் காரணமாகக் குறியீட்டுச் சொல்லாய் ஏற்றுக்கொண்ட நாம், அதற்குரிய இடத்தைத் தருவதோடு நின்றுவிடுவதைத் தவிர, அச்சொல்லினின்றும், 'தமிழ்' என்ற சொல்லைப் பெறவிரும்போம்.

இந்நூலிலுள்ள முதற் கட்டுரையில் நான் குறிப்பிட்டுள்ளது போன்று, வடக்கே வழங்கிய பிராகிருதம், பாலி, பைசாசம், பிராமிபோன்ற தொன் மொழிகள், தமிழ் இனஞ்சார்ந்த திராவிட மொழிகள் என்பதைக் கருத்திற் கொண்டால், திராவிடம் என்ற சொல்லினின்றும் தமிழ் என்ற சொல்லைத் தோற்றுவிக்கும் கொள்கை, மறைந்துவிடுகின்றது.

> ''ஈண்டு இடம்பெற்ற ஒவ்வொரு மாற்றமும் திராவிட ஒலிமுறை விதிகளை அடிப்படையாகக் கொண்டனவே''

[ஒப்பிலக்கணம் 12-ம் பக்கம்]

'த்ரமிடம்,' 'தமிழ்' என்று மாறும் முறைமையை ஐயர், திராவிட ஒலிமுறை யென்று அழைக்கிறார். எவ்வாறு எனக் காண்போம்:

சமத்கிருத மூலம், த்ரமிட; பிராகிருத மொழி, 'த்ர்' என்ற கூட்டொலியைத்—'த' என மெல்லொலிப் படுத்தியது—'த்ரோஹ' என்பதைத் 'தோஹோ' என்று ஆக்கியதுபோல்! 'ஸ்ர்' என்பதைத் தமிழும் 'ச'கரமாய் மாற்றும்; 'ஸ்ரமண' என்பதைச் 'சமணன்' என்று மாற்றிவிடும். அவ்வாறே பாலி மொழியும், 'ஸ்ர்' என்ற கூட்டொலியைச் 'ச'கரமாய் மாற்றும். 'ஸ்ரமண' என்பது பாலி மொழியில்' 'சம்மன' என்று ஆகும்.

சமஸ்கிருதத்தின் 'த்ர்', 'ப்ர்', 'புர்', 'ஸ்ர்', போன்ற கூட்டொலிகளைத் தமிழ், பிராகிருதம், பாலிமொழிகள் வெறுத்து அவ்வொலிகளைத் தம் ஒலிக்கணமாய் மாற்றுகின்றன என்பதையும், அவ்வொலி முறை திராவிட ஒலிமுறை என்பதையும் கால்டுவெல் ஒப்புக் கொள்கிறார்.

ஆதலின், பாலி, பிராகிருதம் முதலிய மொழிகள், திராவிட மொழிகளே என்ற கொள்கை நிறுவப் பெறுகிறது. அவ்வாறாயின் அத்திராவிடமொழிகள், (தமிழ் நீங்கலாக) 'தமிழ்' என்ற சொல்லைத் 'தமிழ்' என்றே அழைக்கலாம் அல்லவா? ஆம், அழைக்கலாம், பண்டைக் காலத்தும் அச்சொல் வழங்கப் பெற்றிருந்தால்!

தமிழ் என்ற சொல், பண்டைக் கால வழக்கைப் பெற்றுள்ளது என்பதையும் ஐயர் அவர்களே ஒப்புக் கொள்கிறார்.

''...முதன் முதலில் வந்த டென்மார்க் நாட்டுப் பாதிரிமார்கள், இம்மொழிக்கு இட்ட பெயராகிய 'தமுலிக மொழி' என்பதில், அவ்வெழுத்தின் தொன்மையொலி பற்றிய அடிச்சுவடு இடம் பெற்றுள்ளது...'' (பக்-12.)என்ற வரிகளை நோக்குக.

இவற்றால், தமிழ் என்ற சொல்லின் தொன்மையொலி 'தமிழ்' என்றே கொள்ள இடம் ஏற்படும்.

அவ்வாறாயின், 'த்ர்' 'ப்ர்' என்ற கூட்டொலிகளைவெறுக்கும் பண்டைத் திராவிட மொழிகளான பாலியும், பிராகிருதமும், தம் இயல்புக் கேற்பத் 'தமிழ்' என்பதைத் 'தமிழ்' என்றே அழைக்கலாம் அல்லவா? ஆம், அவ்வாறு அழைத்ததற்குச் சான்று மேலே காட்டப் பெற்றது.

......'' மகாவம்சம் என்ற பாலி மொழி நூலில் வழங்கும் வடிவம், 'தமிளோ' என்பதாகும்.'' (பக்-11)

பாலி மொழியால் 'தமிளோ' என்றும், டென்மார்க் நாட்டுப் பாதிரிமார்களால் 'தமுலிகா' என்றும் அழைக்கப் பட்ட சொல்லின் தொன்மை வடிவம், தமிழ் என்பதன்றி வேறே எது?

ஆனல், தமிழ் கொண்டுள்ள இயற்கையான 'ழ'கரம் சமத்கிருதத்தின் 'ட'கரத்தைத் (த்ரமிட என்பதிலுள்ள 'ட'கரம்) திரித்த திரிபு என்று கால்டுவெல் ஐயர் பிறழ வுணர்கிருர்.

பாலி, பிராகிருதம் போன்ற பண்டைத் திராவிடமொழிகள் 'ழ'கரம் அற்றவை. அதன் காரணமாகத்தான், பாலி, 'தமிளோ' என்று, அழைக்கிறது. ஆனல், தமிழ்ச் சொற்களில் ஆதிக்கம் வகிக்கும் 'ழ'கர ஒலிச்சொற்கள் ஏராளமாய் இடம் பெறக் கண்டும், தமிழ் என்பதிலுள்ள 'ழ'கரம், சமத்கிருத 'ட'கரத்தைத் திரித்த திரிபு என்று கொள்வானேன்?

'த'கரமும் 'ம'கரமும் திராவிட மொழிகளின் இயற்கை ஒலிகளாய் இருக்கவும், ''த்ர'', ''மி'' என்ற சமத்கிருத ஒலியின் திரிபாகக் கொள்வதற்குக் காரணம்? எல்லாவற்றிற்கும் மேலாய்த் தமிழின் சிறப்பொலியாய் மிகப் பயில இடம் பெறும் 'ழ'கரம், சமத்கிருத 'ட'கரத்தினின்றும் திரிந்ததாய்க் கொள்வதற்குக் காரணம்?

'நாழி' யை 'நாடி' என்றும், கோழியைக் 'கோடி' என்றும் சமத்கிருதம் கொண்டதெனின், அஃது, அதன்பால் 'ழ'கரம் இன்மையையே குறிக்கும்.

'தமிழ்' என்ற சொல்லுக்குப் பொருள் காண்டல் அரிது. எனவே அச்சொல் 'த்ரவிட' என்பதன் திரிபாகத்தான் இருக்க வேண்டும்' என்று கொண்டு, 'த்ரமிட' ஒலியே 'தமிழ்' என்று முடிவு செய்கிருர் ஐயர். அவ்வாருயின், திராவிட மொழிகளின் இயற்கை ஒலிகளான தகர, மகரங்களைப் பொருளற்றதாய்த் தள்ளும் தவறு நேர்வது இயற்கை.

'தமி' என்பது, தனித்து நிற்பது என்றபொருளைத்தரவும் அதனை, 'ழ'கரம் இணைவதன் காரணமாய்த் தள்ளுவானேன் ?

'ழ'கரம், தமிழின் இயற்கையொலியாய் இருப்பதால், அதை 'இயற்கை இணைவு' என்று கொள்வதில் தவறென்ன?

இறுதியாய்ச் சமத்கிருதச் சொல்லாகிய 'த்ரமிட' என்பது, திராவிட ஒலிமுறைப்படி திரிந்து, 'தமிழ்' என்றவடிவம் பெறும்முறை:

| சமத்கிருதம் | திராவிடம் |
|---|---|
| த்ர- | த |
| மி- | மி |
| ட- | (ழ) ழ் |
| (த்ரமிட) | (தமிழ்) |

கால்டுவெல் ஐயர் காட்டும் முறையே மேலே உள்ள படம்.

தமிழினஞ் சார்ந்த பண்டைய இந்திய மொழிகளைத் 'திராவிட மொழிகள்' என்ற குறியீட்டுச் சொல்லால் வழங்கும் கொள்கை வேறு, தமிழ் என்ற சொல்லைத் தோற்றுவிக்கும் கொள்கை வேறு, —என்று நான் குறிக்க விரும்புகிறேன்.

உண்மையில் பார்க்கப் போனல், 'தமிழ்' என்பதே, சமத்கிருத ஒலி முறைப்படி, 'த்ரமிட' என்று மாறியது.

அச்சொல், நாவலந் தீவின் தொன்மைக் குடிகள் அனைவரையும் குறிக்கப் பின்னர் பயன்பட்டதன் காரணமாய், அதனை அறிஞர் உலகம் ஏற்று அழைத்தது.

'ஆந்த்ர பாஷா', 'தெலுங்கு', 'தெனுகு' ஆகியவற்றிற்கும் மூலங்காண இயலா நிலையில், அச்சொற்களைத் 'த்ரமிட' என்பதினின்றும் பெற ஏன் இயலவில்லை?

'த்ர' என்ற கூட்டொலி'க்கு நேரான 'த'கர ஒலி இருப்பதன் காரணமாய்த்-'த்ரமிட' என்பதினின்றும் தமிழ் வந்ததென்று கொள்வது, மொழிநூற் கொள்கைக்குப் புறம்பானது.

வரலாறு, ஒலி இயல் ஆகியன, மேற்கூறிய கொள்கையை அறவே மறுத்துவிடுகின்றன.

'சமத்கிருத 'ட'கரம் திரிந்து 'ழ'கரம் ஆயிற்று, என்பதினும், தமிழ், தன் இயற்கை 'ழ'கரத்தைப் பெற்றுள்ளது

என்பதே சாலப்பொருந்தும். இங்கேதான், பிறப்பியல்முறை விளக்கம் பெறுகின்றது.

தன் இனஞ்சார்ந்த பிறமொழிகள், (பாலி, பிராகிருதம் போன்றவை) 'ழ'கர ஒலியை இழந்து நிற்பவும், தான்மட்டும் 'ழ'கரம் எய்தி, அவ்வொலியின் உருவமாய் மாறிநிற்கும் ஒன்றினாலேயே, தமிழ் மொழிக்குத் தமிழ் என்ற பெயர் தோன்றியது.

தமி = தனித்தல்.

தமி + ழ் = (தமிழ்) } தனித்து நின்று 'ழ'கரம் பெறுதல்—அல்லது தனித்து நின்று 'ழ'கரம் பெறும் மொழி.

தமிழ்போன்றே, சமத்கிருதக் கூட்டொலியை வெறுக்கும் பாலிமொழி, தமிழைத் 'தமிளோ' என்றழைப்பது காண்க. தமிழினின்றும் தோன்றிய பிற்காலக் கிளையாகிய மலையாளம், 'ழ'கரம் பெற்றிருத்தல் இயற்கையே! ஆனால், தமிழ் போன்றேமிகத் தொன்மை படைத்தன வாய பாலி, பிராகிருதம் ஆகியன, தமிழ் இன உறவு பூண்ட பண்டைத் திராவிட மொழிகளாம். அவற்றில் 'ழ'கரம்இன்மை, ஈண்டு கருதத் தக்கதாம்.

தமிழோடு ஒப்ப வழங்கிய அம்மொழிகள், 'ழ'கரம் இழந்து நிற்பத் தமிழ்மொழி மட்டுமே 'ழ'கரம் பெற்றுள்ள புதுமை— சிறப்பு ஆகியனவே, 'தமிழ்' என்ற சொல்லிற்காணலாகும் பிறப்பியலாம்.

தமிழ் என்ற சொல், தொல்காப்பியத்திற் காணப்படுவதொன்றே, அச்சொல்லின் தொன்மையை நிறுவும் சான்றும். அக்காலத்துத் திரிபுபெற்ற தெலுங்கும், கன்னடமுங்கூட 'ழ'கரத்தை இழந்தே நின்றன.

# திராவிட மொழிகள்

ஆரியர் வருகைக்குமுன் வழங்கி வந்த, தமிழ் போன்ற தொன்மை படைத்தனவாய வட இந்திய உள்நாட்டு மொழிகளைத் திராவிட மொழிகள் என்று கொள்வது, வரலாற்றோடு இணைந்த கொள்கையாம்.

வட இந்தியாவில், பாண்டவர், கவுரவர், ஆயர் குலக் கண்ணன் ஆகியோர் உறுதிசான்ற அரசுகளை நிறுவி, வாழ்ந்த முப்பெரும் பிரிவினர் ஆவர். அவ்வாறே தென்னகத்தில் சேர, சோழ, பாண்டியர் என்பாரும் உறுதிசான்ற அரசுகளை நிறுவி ஆண்ட முப்பெரும் பிரிவினர் ஆவர்.

இவ்விருசாராரிடையேயும் உறவுமுறை நிலவிவந்துள்ளது என்பதைக் குறிக்கும் சான்றுகள் காணக் கிடைக்கின்றன.

அர்ச்சுனன் என்பான், அல்லி என்ற பாண்டியர் குலப் பெண்ணை மணந்ததாகப் பழங் கதை கூறும்.

பாரதப் போரில் பாண்டவர், கவுரவர் ஆகிய இரு திறத்தினர்க்கும் சேரன் பெருஞ் சோறளித்த வரலாற்றையும் சங்க இலக்கியம் செப்பும்! இருசாராரும் தமிழ் மன்ன ரோடு உறவு கொண்டவர் என்றமையினாலேயே நடுநின்று, பெருஞ் சோறளிக்கும் நிகழ்ச்சி நடைபெற்றது.

இவ்வுண்மை தெரிவிக்கும் அகப்புறச் சான்றுகள், நாவலந் தீவின் பண்டைக்குடிகள் என்பார் அனைவரும், திராவிடர் என்ற ஓரினத்தவர் என்று உணர்த்தும்.

தீம்புனல் உலகின் இந்திரன், சோழர் நாட்டில் விழாக்கொள்கின்றான்; முருகன், சேரர்க்குக் கடவுள் ஆகின்றான். நெய்தல் நிலத்திற்கு வருணன் வழிபடு கடவுள்; அவ்வாறே விந்தக்காடு தொடங்கி, வடமதுரை வரை காணப்பட்ட காட்டுலகிற்கு மாயோன் தலைவன்.

அவன்; விந்தத்திற்கும் தலைவன் ஆவான்; 'கோ+விந்தம்' கோவிந்தம் என்பது, 'விந்தத் தலைவன்' என்று பொருள்படு தலைக் காண்க.

'மாயோன் மேய காடுறையுலகம்' என்று தொல்காப்பியம் சுட்டும் மாயோன், கண்ணன் அல்லன். கண்ணனுக்கு முன்னவன் மாயோன்.

சிவனுக்கு முருகன் பின்னவன் ஆவது போன்று, மாயோனுக்குக் கண்ணன், பின்னவன்.

இக்கண்ணனை, ஆரியர் தம் வசப்படுத்தினர் என்பது முற்றிலும் நம்பத் தகுந்ததே!

அவனே, பாண்டவர், கவுரவர் ஆகிய இரு தரப்பினர்க்கும் அழிவைத் தேடியவன்.

அர்ச்சுனன், "என் உறவினர்மீது, எவ்வாறு போர் தொடுப்பேன்?" என்று மயங்கக், கண்ணன், "பார்த்தனே, நீ ஆரிய முறைக்குப்புறம்பான கொள்கையைக்கூறுகின்றாய்" என்று இடித்துக் காட்டுவான்.

அக்கால ஆரியர் கொள்கை யென்பது, புதுநிலங்கண்டு போராடி நிலைபெறும் போர்க் கொள்கை. அக்கொள்கையைக் கண்ணன் மூலம் எளிதில் நிறைவேற்றிக்கொண்டனர் ஆரியர் என்பதே, பாரதக் கதை தரும் பாடம்!

திராவிடர்களை எதிர்த்துத் தம்மால் ஒழிக்க முடியாது என்றுகண்டு, அவர்களையே ஒருவரோடொருவர் மோதவிட்டு அழியச் செய்தனர் ஆரியர்.

அழிவை நிறைவேற்றி வைத்த கண்ணனும், பின்னர், மரணத்தால் இழுத்துச் செல்லப்பட்டான்.

திராவிட இனம் இவ்வாறு சிதைவுற்ற நிலையில் ஆரியர் தம் அரசு தோன்றுதல் இயற்கையே!

பாண்டவர், கவுரவர் ஆகியோர் பேசிவந்த மொழிகள், பாலி, பிராகிருதம் போன்ற தொன்மொழிகளே என்று கொள்வதில், தடை யொன்றும் இருக்கக் காணோம்.

இத்தகைய வரலாற்றுப் பகைப் புலனில், மொழிகளின் வளர்ச்சி, வீழ்ச்சி, தேய்வு, மறைவு ஆகியவற்றைக் கண்டால்

அன்றிச் சொற்களின் ஒப்பீடு மட்டுமே, உண்மை நிலையை உணர்த்தப் போதிய சான்ருகாது.

ஆரியர் அரசுரிமை பெற்றபின், 'ஆரியா வர்த்தம்' என்று பெயர் சூட்டிக் கொண்டமையும் தெளிவாம்.

''ஆரியா வர்த்தத்தில்,'' பண்டைத்திராவிட மொழிகளை அடக்கிஒடுக்குதல், அல்லது, அரசுரிமையற்ற மொழிகளாய்ச் செய்தல், போன்ற கொள்கைகளே ஆரியரால் கடைப் பிடிக்கப்பட்டன.

'பிருகத்கதை'யை யாத்த குணட்டியர் போன்ருேர், ஆரிய ஒடுக்கு முறையை எதிர்த்துக் காடு புகுந்து, அக்காட்டு மக்களின் மொழியாகிய பைசாச மொழியிலேயே தம் பெரு நூலை இயற்றினர் என்று கொள்வதிற் பிழைபாடு நேராது என்றே கருதுகின்றேன்.

எங்கெங்கே திராவிடக் கூறு காணப்பெறுமோ, அங்கெல் லாம் ஆரிய எதிர்ப்பும் காணப்பெறுதல் இயற்கை!

வரலாற்ருல் உருவாக்கப்பட்ட இவ்வெதிர்ப்புணர்ச்சி வெறும் போலி உணர்ச்சியன்று; அல்லது, புறச்சார்பு பற்றிய உணர்ச்சியும் அன்று; அகச் சார்பு பற்றிய தெளிந்த உணர்ச் சியே ஆரிய எதிர்ப்புணர்ச்சி!

ஆரியர் தம் கலப்புக் கொள்கையால், பண்டைத் திரா விட மொழிகள் மூழ்கடிக்கப்பட்ட இறுதிக் கட்டத்திலும்- புத்தர், பாலி மொழியைக் கையில் ஏந்திச் சமத்கிருதத்திற்கு அறைகூவல் விடுத்தார்.

திராவிடக் கூறு, புத்தர் வடிவில் மீண்டும் தலை தூக்கி யது. அது, ''ஆரியா வர்த்தத்தை''ப் பழி வாங்கப்புறப்பட் டது; ஆனல் வஞ்சக முறையால் அல்ல...

நேரியதும், தீர்க்கமானதும், சிந்தனையாளர்களின் இடை விடாக்கனவில் எழுந்த ஒளி போன்றதுமான அற வழியில் மக்களை ஒன்று சேர்ப்பதன் மூலம், ''ஆரியர் தம் தெய்வ ஆற்றலை'' நேருக்கு நேர் போட்டிக்கு அழைத் தது. ஆரியர் தந் தெய்வ மொழியாம் சமத்கிருதத்தின்

குரல் வளையைப் பற்றி நெரித்து, அதன் கீச்சுக்குரலை மக்கள் முன் காட்டிக் கொடுத்தது.

எந்தக் கண்ணன் உறவினரைக்கொல்லும் போர்க்கொள் கையால் "மகாத்மா" பட்டம் பெற்ருனே, அதே கண்ணனை வழிபடும் நிலத்தில், போர்க் கொள்கைக்கு எதிரான கொள் கையை நிலைநிறுத்தி, 'மகான்' என்ற பெயரைப் புத்தர் எய்தி ஞர்.

இவ்வாறு, திராவிடக்கூறு என்பது, தன் நிலத்தில் மட்டு மின்றி, அயல் நிலங்களிலும் தன் சுடரைப் பரப்பும் ஆற்றல் பெற்று நின்று நிலவுவதாம் என்பதனை அறிஞர் உணர்வர்.

---

# சேர, சோழ, பாண்டியர்.

வட புலத்துத் திராவிடரை வென்ற ஆரியர், தென் புலத்துத்திராவிடரை வெல்ல இயலா தென்பதனை நன்கு கண்டனர்.

அவர்கள் கண்முன் காட்சியளித்தவை; விந்தமலை; அதனினும் உயர்ந்தும், அதனினும் நீண்டும், பேராற்றலுடன் விளங்கும் தமிழ்; அத்தமிழ் மொழியை உயிரெனக்கொண்ட சேர, சோழ, பாண்டியர்கள்!

தெற்கே, ஆரியர்க்குக் கண்ணன் போன்ற ஒரு துணைவன் கிடைத்திலன். எனவே பெரு மன்னர்கள், குறு மன்னர்கள் ஆகியோரை அண்டி நிற்கும் நிலையை, அவர்கள் மேற்கொண்டனர்.

தமிழின் விடுதலை உணர்ச்சியைக்காட்டுவதும், திராவிடப் பண்பின் இனிமையை உணர்த்துவதும் 'ழ'கரம் ஒன்றுதான். அத்திராவிடப் பண்பைக் கெடுக்கும் முயற்சியை அவர்கள் மேற்கொண்டனர்.

சேர, சோழ, பாண்டியக் குடும்பங்கள் வந்தேறிகளுக்கு வாழ்வளித்தன வேனும், தமிழைக் காக்கும் கொள்கையைத் தலையாய கொள்கையாய்க் கொண்டன. இத்தகு சிறப்புப் பெற்ற சேர, சோழ, பாண்டியர் பெயர்கள், சமத்கிருத மூலம் உடையன என்று கொண்டார் கால்டுவெல்.

அஃது, காலத்தால் நேர்ந்த வழுவென்றே நான் கருதுவேன்; அச்சொற்கள் தமிழ் மூலம் உடையன என்பதை ஈண்டுக் காட்டுவேன்:

சோழர்: 'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' என்று சுட்டப்படும் மருதஞ் சார்ந்த திணை சோழநாடு. ஆண்டு, திணை இயற்கை காரணமாய்ச் 'சோ' என்று மழை பெய்யும் ஒலியே பயிலப் பெறுதலின், 'சோழம்' என்று வழங்கப் பெற்றது.

[வாணசுரன் என்பவன் நகரிற்கும் 'சோ' என்ற பெயர் வழங்குவதனைக் காண்க.]

'வீழ்' என்பதில், வீழ்தற் பொருள் பெறும் 'ழ்'—'சோ' என்ற ஒலி, தரையை நோக்கி என்றும் வீழ்வதாக, அவ்வொலியை முற்பட ஏற்றும், 'அம்'—விகுதி எய்தியும், 'சோ—ழ்+அம்'—என்று இணைந்து, 'சோழம்' ஆனது. [வேழம், தாழம், ஈழம் என்ற சொற்களைக் காண்க.]

சேரர். சோழநாடு சார்ந்தோர், சோழர் ஆயினர். அவ்வாறே சேயோனின் மைவரை உலகு சேர்வோர், சேரர் ஆயினர்! 'சேர்' என்ற வினையடிப் பெயர், 'அர்' விகுதி பெறுவதால், 'சேரர்' ஆவது காண்க.

[சேயோனைச் 'சேர்வோர்' சேரர், என்றலுமாம்.
'சேர்தல்,' 'சேர்வை' என்ற சொற்களைக் காண்க.
சேர்தல்—இடைவிடாது நினைத்தல்; சேர்வை—படை.
இவ்வாறு, 'சேரர்', தமிழ் மூலம் பெறுதல் காண்க.]

பாண்டியர்: 'பாண்டு' என்பது வெண்மை நிறங்குறிக்கச் சுட்டப் படுவதோர் சொல். இந்திரனின் ஆசனம் வெண்மை நிறம் பெற்ற கம்பளம். அஃது, 'பாண்டு கம்பளம்' என்று பெயர் பெறும்.

வெண்மையாய்ச் சுடப்படும் மட்கலம், 'பாண்டு+அம்' என்று இணைந்து, 'பாண்டம்' ஆவது காண்க.

'பாண்டு+அரங்கம்' எனப்படும் பாண்டரங்கம், சுடலையைக் குறிக்கும். அவுணர் எரியுண்ட சுடலை அரங்கில், சிவன் ஆடிய கூத்தினைப் 'பாண்டரங்கம் என்பர். இது பதினொரு கூத்துக்களில் ஒன்று.

அவுணர் எரியுண்ட சாம்பலை மேனியிற் பூசியதால், சிவன் பாண்டு நிறம் பெற்றான். அதனால், அவனைப் பாண்டியன் என்றழைப்பர்.

'பாண்டு' என்பது, 'இயம்' என்ற விகுதி யாற் 'பாண்டியம்' எனப் பண்பும், 'பாண்டியன்' எனப் பெயரும் தந்து நிற்கும். 'பாண்டியம்' என்பது பாண்டிய நாட்டைக் குறிக்கும்,

எனவே, பாண்டியனை வழிபடும் மரபினர், பாண்டியர் ஆயினர்.

பாண்டியனுக்குக் 'கௌரியன்' என்ற பட்டப் பெயரும் உண்டு. கௌரி என்றால் பார்வதி.

திருமேனியின்ஒரு பால்,உமையைக் கொண்ட சிவனை வழி படுவோர்க்கு, உமையும், உரிமையுடையளாம்! அதனாலேயே பார்வதியின் பட்டப் பெயர், பாண்டியர்க்குக் கிடைத்தது.

பாண்டிய நாட்டின் எல்லையைத் தொடும் கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் ஆகியோர் காணும் முதற் காட்சி, கொற்றவையைப் பரவும் காட்சி என்பதை ஈண்டுக் கருத்திற் கொள்க.

மதுரையை அங்கயற் கண்ணியின் கோயில் அணி செய்து நிற்பதை நம்மால் மறக்க முடியுமோ?

சிவன், தன் பக்தனுக்காக மண் சுமந்து, பிரம்படியை ஏற்று, விளையாடிய இடம் மதுரை யன்றோ? திருக்கயி லாயப் பரம்பரை உரிமை, பாண்டிய நாட்டிற்கே உரியதாம்!

இவ்வாறு, பாண்டியர் எனும் பைந்தமிழ்ச் சொல்லும், சேரர், சோழர் எனும் செவ்விய சொற்களும் செந்தமிழ் மூலம் உடையன எனும் கொள்கை நிறுவப் பெற்றது.

''கேரளம்புத்ர,'' ''சோட,'' ''பாண்ட்ய'' என்ற சமத் கிருதச் சொற்களின் திரிபால், சேர, சோழ, பாண்டியர் எனும் சொற்கள் பிறக்க வில்லை என்பதும், அத் தமிழ்ச்சொற்களைத் தன் ஒலிக்கணத்திற் கேற்ப வடமொழி வழங்கிய வழக்கே, மேற் காட்டிய 'கேரளம்புத்ர' முதலியவை என்பதும் தெளி வாம்.

திணைப்பெயர், திணைசார்ந்த மக்கட் பெயர் ஆகிய வற்றிற் குரிய மூலங்களைப் பிற மொழிச் சொற்களிற் காண முற்படுவது, விஞ்ஞானக் கொள்கைக்கு முரண்படுவதாம்!

# நானிலம்

நானிலம் என்ற சொல் உலகைக் குறிக்கும். ஆனல், இலக்கணவகையால், அது, நான்கு திணைகளைக் குறிக்கும். நான்கு திணைகளாலியன்ற நிலப்பரப்பைக் குறிக்கும்.

'நால்+நிலம்' என்பது, புணர்ச்சி விதியை ஏற்று நானிலம் என்று மாறும்.

மலை, காடு, வயல், கடல் ஆகியனவும், அவை சார்ந்த நிலங்களும் புணர்ந்த புணர்ச்சியே, நானிலம்.

இந்நானிலமே, தமிழர்க்கு வாழ்வளித்த மேனிலம்!

1. குறிஞ்சி—மைவரை உலகம்—மலையும், மலைசார் இடமும்.
2. முல்லை—காடுறை யுலகம். காடும், காடு சார் இடமும்.
3. மருதம்—தீம்புனல் உலகம். வயலும்,வயல்சார் இடமும்; ஆறும், ஊரும், நகரும்.
4. நெய்தல்—பெருமணல் உலகம்; கடலும், கடல்சார் இடமும்.

இந் நான்கு திணைகட்கும் உரிய கடவுளர்கள், அல்லது தலைவர்கள் அனைவரும் திராவிடர்களே!

குறிஞ்சிக்குக் கடவுள் முருகன்
முல்லைக்குக் கடவுள் மாயோன்
மருதத்திற்குக் கடவுள் இந்திரன்
நெய்தலுக்குக் கடவுள் வருணன்.

திணைபெறுது நின்ற முதற் பெருந்தலைவனும் சிவன், திணைசுட்டிய கடவுளர் நால்வர்க்கும் முற்பட்டவன். சேயோன், (முருகன்) மாயோன் ஆகிய இருவரும், சமகாலத்தவர். அவ்வாறே, இந்திரன், (வேந்தன்) வருணன் எனும்இருவரும் சமகாலத்தவர் என அறியலாம்.

சோழர்க்கு முதல்வன் இந்திரன்; சேரர்க்கு முதல்வன் முருகன். வருணன் நெய்தல் நிலமாக்களின் பண்டைத் தலைவன்; இந்திரனுக்குக் கட்டுப்பட்டவன், அவன் ஞாயிறு குலத்தைச் சார்ந்தவன். வருணவணக்கம் என்பது, ஞாயிறு வணக்கத்தில் அடங்கியுள்ளது.

ஞாயிறு வணக்கம்,நெய்தலுக் குரியது. சிலம்பு,''ஞாயிறு போற்றுதும்'' என்று பாடுகிறது. திங்கள் வணக்கம் பாண்டியர்க் குரியது, சிவன் 'பிறைசூடி' என்று போற்றப்படுவதால். ''திங்கள் போற்றுதும்'' என்று சிலப்பு பாடுகிறது.

இந்திர வழிபாடு சோழர்க்கும், முருக வழிபாடு சேரர்க்கும் உரியவை.

பாண்டியர்க்குக் கடவுள் சிவன். சிவனை வணங்கும்அரசர் திங்கள் குலம் என்று பேசப்படுவர்.

சோழகம் தொடங்கிக் காழகம் வரையிற் காணப்படும் தீம்புனல் உலகிற்கெல்லாம், இந்திரனே தலைவன். அவ்வாறே விந்தத்தை உட்படுத்தும், விந்தங் கடந்தும் காணப்பெற்ற காடுறை யுலகிற்கெல்லாம் மாயோனே தலைவன்.

நாவலந்தீவின் கடற்கரை நிலங்கள், வருணன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தவை. சிவன், இமயத்தை உட்படுத்து ஆண்டவன்.

இமய முடியைத் தொடும் பிறையும், அங்கே துள்ளிய மானும், ஓடிய கங்கையும், படிந்த மேகமும், கிடந்த பாம்பும் சிவன் அணிகலன்களாயின.

கற்பனை காட்டும் வரலாற்றுக் கருவினை இவ்வாறு காணலாம்.

இந்திர வணக்கம், சிவ வணக்கம், வருண வணக்கம் அல்லது ஞாயிறு வணக்கம், மாயோன் வணக்கம் முதலியன தமிழ் நிலங் கடந்தும் காணப்படும் காரணம், இவ்விவரங்களால் தெளியப்பெறும்.

வரலாற்று காலங் கடந்த தொன்மைக் காலத்தே, பல்வேறு மக்கட் கூட்டத்தோடும், தரையிலும், கடலிலும் திராவிடர் போர் புரிந்துள்ளனர் என்பதை, செவி வழிச்செய்தி

மரபும், அம்மரபு பற்றிய பண்டை இலக்கியங்களும், கலை களும் தெளிவுபடுத்தும்.

'கடற்கடம் போட்டிய முருகன்', 'திரிபுரம் எரித்த விரி சடைக் கடவுள்', 'தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம் பியன்' எனும் சொற்றொடர்களைக் காண்க.

திராவிடர்களின் சமயங்களாகிய சைவம், வைணவம்; சமணம், புத்தம்-ஆகிய நான்கும் சிவன், முருகன், மாயோன்; இந்திரன்-ஆகிய நால்வரையும் ஏற்றுக் கொண்டுள்ளன. பிற் காலத்து வந்து நிலைபெற்ற ஆரியர் இந்திரனை ஏற்றுப் புகழ்ந் தனர்; பின்னர் இகழ்ந்தனர்; முரண்பாட்டின் இறுதி எல்லை யை எய்தினர்.

ஈண்டு, முருகனைப் பற்றிய ஒரு சிறு விளக்கம்: முருகன், சிவனுக்குக் காந்தருவமாய்க் கார்த்திகைப் பெண் வயிற்றிற் பிறந்தான் என்பதே, புராணக் கற்பனையுட் புதைந்த புதையல்!

இக் கொள்கையை மனத்துட் கொண்டு, சேர, சோழ, பாண்டியர் பற்றிக் கால்டுவெல் ஐயர் ஒப்பிலக்கணம், காட் டும் புராணச் சான்று காண்போம்:

''தமிழ் நாட்டு வரலாற்று மரபின் வெறும் எதிரொலி என மதிக்கத்தக்க ...... செய்தி ஹரிவம்சத்திலும் வேறு பல புராணங்களிலும் கூறப்பட்டுள்ளது. அவற்றில், 'பாண்ட்ய', 'கேரல', 'கோல', 'சோல', என்ற இந்நால்வரும், திங்கள் குலத்து அரசனாகிய துர்வசுவின் தத்து மகனாகிய ஆக்ரீட அர சனின் நான்கு மக்களாகக் கூறப்பட்டுள்ளனர்.

இவ்வரிசையில் வரும் கோலர் யார் என்பது இன்னமும் விளங்கவில்லை. இதுபோலும் சூழ்நிலையில், கோலருக்குப் பதி லாகப் புராணங்கள் பலவற்றிலும், 'கர்னுடர்' எனக்கூறப்படு வதால், அவ்வரிசையில் வரும் கோலர் கன்னட மக்களைக் குறிக்க மேற்கொண்டதாம் எனச்சிலர் கருதுவர். ஆனால், தங்க ளாலோ, தங்களை அடுத்து வாழ்ந்த பிற திராவிடர்க ளாலோ கன்னட மக்கள் கோலர் என என்றும் அழைக்கப் பெற்றதில்லை. கோல அல்லது கொலாரியன் இனத்தவரும்

திராவிடரே என்ற எண்ணத்தால், அவர்களே ஈண்டுக் குறிப்பிடப்பட்டுள்ளனர் என்பது பொருந்தும் முடிபாகத் தோன்றுகிறது.'' (கால்டுவெல்—ஒப்பிலக்கணம்-தமிழ்-பக்-20.)

இச்செய்தியால் ஒருவாறு நாம் பொருந்தும் முடிவுக்கு வரக்கூடும்:

'தென் கீழ் அரசன்' அல்லது * 'வாகீய அரசன்' எனும் சொற்கள் 'ஆக்ரீட' எனும் வடிவம் பெற்றன என்று நாம் கொள்ளலாம். இக்கொள்கையால், 'ஆக்ரீட' அரசன், தென்னவன், சிவமரபு பெற்றவன், 'திங்கள் குல உரிமையினன், என்பன தெளிவாம். பெற்ற இச்சான்ருல் சேர, சோழ, பாண்டியருள், பாண்டியர்க்கே திங்கள் குல உரிமையுண்டு என்பது தெளியப்பெறும்.

முருகன், பார்வதி வயிற்று நேர் மகன் அல்லன். மற்றும் அடங்காப் பிள்ளையாய்க் கிளம்பியவன். எனவே, அவன் திங்கள் குல உரிமையைப் பெருன். முருகனை வணங்கும் சேரரும் திங்கள் குல உரிமையைப் பெருர்; சோழர் தம் குடும்ப முதல்வன் இந்திரனை வணங்குவர். அவரும் திங்கள்மரபின் சிறப்பைப் பெருர். ஆனுல், பாண்டியர் தம் குலமுதல்வனுகிய சிவனை வணங்குதலால், அவர் திங்கள் குல மரபைப் பெறுவர்.

சேர, சோழ, பாண்டியர் பற்றிய புராணச் செய்தியை உணர்த்தும் கால்டுவெல் ஐயர், கபாடபுரப் பொற்கதவைத் திறந்து காட்டுதல் போன்ற ஓர் புதையலை நமக்கு வழங்குகிருர். அப்புதையலே 'ழ'கர ஒலி!

கடல் கொண்ட குமரிக் கண்டத்தின் மரபும், தென்னகமாம் பெருநிலப்பரப்பின் மரபும் பெற்ற 'ழ'கர ஒலி, — சேரர், சோழர், பாண்டியர் என்பார் தென்னவர் என்பதனை நிறுவுவதோடு, அவரொடும் சேர்த்துக் கூறப்பட்ட கோலர் யார்? என்பதனையும் நிறுவும்.

---

*சிவனுக்கு 'வாகீசர்' எனும் பெயருண்மை அறிக.

***

# இரண்டாம் பகுதி

அடுத்து வரும் இந் நூலின் இரண்டாம் பகுதியில் 'ழ' கர ஒலியின் உயிர்த் தன்மை, அஃது, மேற்றிசையைக் கீழ்த்திசையோடு இணைத்துள்ள புதுமை, அதன் காரணமாய்த் தமிழ் அடைந்துள்ள பெருமை ஆகியன தக்க சான்றுகளுடன் நிறுவப்பெறும்.

***

மக்கள் நூலகம்
10, கீழண்டை மாட வீதி,
சென்னை - 29.

# தமிழும் சமஸ்கிருதமும்

★

அரிய ஆராய்ச்சி நூல்

★

கவிஞர் தமிழ்ஒளி
72/73, மவுண்ட்ரோடு
சென்னை-6.